உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 10 | இரக்தாட்சி௵ புரட்டாசிமீ ௧௳ | 1924௵ செப்டம்பர்மீ 16௳ | பகுதி 3

## கடவுள் வணக்கம்.

இகபரமு முயிர்க்குயிரை யானெனதற் றவருறவை
யெந்த நாளுஞ்
சுகபரிபூ ரணமான நிராலம்ப கோசரத்தைத்
துரிய வாழ்வை
யகமகிழ வருந்தேனை முக்கனியைக் கற்கண்டை
யமிர்தை நாடி
மொகுமொகென விருவிழிநீர் முத்திரைப்பக் கரமலர்கள்
முகிழ்த்து நிற்பாம். (1)

சாதிகுலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தி யருவுருவத்
தன்மை நாம
மேதுமின்றி யெப்பொருட்கு மெவ்விடத்தும் பிரிவறநின்
றியக்கஞ் செய்யுஞ்
சோதியைமாத் தூவெளியை மனதவிழ நிறைவான
துரிய வாழ்வைத்
தீதில்பர மாம்பொருளைத் திருவருளே நினைவாகச்
சிந்தை செய்வாம். (2)

எல்லாமுதவு முனையொன்றிற் பாவனை யேனுஞ்செய்து
புல்லாயினு மொருபச்சிலை யாயினும் போட்டி றைஞ்சி
நில்லேனல் யோகநெறியுஞ் செயே னருணீதி யொன்றுங்
கல்லேனெவ் வாறுபரமே பரகதி காண் பதுவே. (3)

கடலெத்தனை மலையெத்தனை யத்தனை கன்ம மதற்
குடலெத்தனை யத்தனை கடலுண் மணலொக்கு மிந்தச்
சடலத்தை நான்விடு முன்னே யுனைவந்து சாரவிருட்
படலத்தை மாற்றப் படாதோ நிறைந்த பராபரமே. (4)

## அரும்பொருள் விளக்கம்.

1. இகம் பரம்=இம்மை மறுமை.

ஆண்டவனையன்றி நாமில்லை. அவர் எப்போதுமே ஆன்மாவோடு பொருந்தியிருக்கிறார். அஞ்ஞானத்தால் நமக்கு அவ்வுண்மை விளங்கவில்லை. அதனால் அவர் நமக்குள்ளாக மறைந்து நிற்கிறார் என்று ஆன்றோர் கூறினர்.

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
* * * * " என்றருளினர்

வாகீசப்பெருந்தகையார்.

யான் எனது அற்றவர்=அகப்பற்று புறப்பற்றுகளை யொழித்த ஞானிகள்.

அத்தகைய ஞானிகள் உள்ளத்தில் ஆண்டவன் பிரகாசிப்பதால் அவர்களுடைய உறவு என்றனர்.

சுகபரிபூரணம்=ஆனந்தமாய் நிறைந்துள்ளது.

நிராலம்பகோசரம்=ஒரு பற்றுக்கோடுமின்றி இருப்பது.

துரியவாழ்வை=அஞ்ஞானம் நீங்கிய நிலையில் உள்ளதை.

இருவிழிநீர்முத்திரைப்ப=இரண்டு கண்களும் முத்துபோன்ற ஆனந்த பாஷ்பம் பொழிய.

கரமலர்கள் முகிழ்த்துநிற்பாம்=கரங்குவித்து அஞ்சலியஸ்தராய் வணங்குவாம்.

ஈசுவரனைச் சிந்தித்து பக்திப்பெருக்கால் மனங்கரைந்து கண்களில் நீர்துளிக்க அஞ்சலியஸ்தராய்த் துதிக்கவேண்டும் என்பது இதன் கருத்து.

2. சா ...நாமம் ஏதுமின்றி = பிறப்பிறப்பற்றவராய், பந்தம் ...பதமற்றவராய், ஜாதி, குலம், உருவம், அருவம், உரு ...முதலிய ஒன்றுமில்லாதவராய்.

...ண்மையை இன்னவாறென்று வரையறுத்துக்

...வஸ்துக்களிலும் எல்லா விடங்களிலும் ...வாந்தரியாமியாக விருந்து என்றபடி.

...னி.

...ந்த மனமாகிய உள்ளத்தின்

திருவருளை நினைவாகச் சிந்தைசெய்வாம்=நான் என்பதொழிந்து அன்புருவாயிருந்து துதிப்பாம்.

3. எல்லாம் உதவும்=ஆன்மாக்கள் வேண்டுவன யாவற்றையு மளிக்கும்.

ஆண்டவனே என் மனமொடுங்கி உன்னிடம் பக்தி பெருகுவதற்காக உன்னையொரு சொரூபமாகவேனும் பாவித்து மலர்தூவிப் பூஜித்து வணங்குவதும் செய்யேன். அதாவது நான் சரியை கிரியாமார்க்கங்களையும் அனுசரித்திலேன் என்றபடி.

நல்யோக நெறியும் செய்யேன்=ஆன்மஞானம் பெறற்குச் சாதனமான யோகமும் செய்யேன்.

அருள் நீதிநூல்=ஆன்மஞானத்தைப் போதிக்கும் சாத்திரங்கள்.

"மனிதனாகப் பிறந்தவன் இப்பிறப்பின் பயனை யடைவதற்காகத் தன் தரத்திற்குத் தக்கபடி ஞானநூற்களை யாராய்ச்சிசெய்து யோக சாதனம் செய்து ஞானமடையவாவது முயலவேண்டும். அது சாத்தியமின்றேல் சரியை கிரியைகளையேனும் செய்து படிப்படியாய் மேல் நிலையெய்த முயலவேண்டும். இவையொன்றும் செய்யாதவன் பரகதி யடைய முடியாது" என்பது கருத்தாகும்.

4. "கடலெத்தனை மலையெத்தனை அத்தனை கன்மம்"—நாம் ஜென்மங்கள்தோறும் செய்யும் கன்மங்களுக்கு அளவில்லை என்பதாம்.

அதனால், நாமெடுக்கும் ஜன்மங்களோ,

கடலுண்மணலொக்கும் = கடலிலுள்ள மணல்களைப்போல் எண்ணவொண்ணாதனவாகும்.

திருப்போரூர் சிதம்பரசுவாமிகள், தம்போன்ற ஒரு மகானோடு சம்பாஷணை செய்துகொண்டிருக்குங்கால் அவரை நோக்கி "சுவாமிகளே! அனாதி தொடங்கி நாம் எத்தனை ஜன்மங்கள் எடுத்திருப்போமோ"? என்று வியந்துரைத்தபோது அப்பெரியார்,

> "எடுத்தஜன னங்கள்தொறும் ஈன்றெடுத்தத் தாயார்
> கொடுத்தமுலைப் பாலனைத்துங் கூட்டின்—அடுத்துவளர்
> பன்னகணைத் துயிலும் பாலாழி யும்சிறிதாம்
> மன்னு சிதம்பர தேவா" என்று கூறினராம்.

இதன்பொருள்:—நாம் எடுத்த ஜன்மங்கள்தோறும் நம் தாய்மார்களிடம் நாம் அருந்திய முலைப்பாலனைத்தும் ஒன்றுசேர்த்தால் மகாவிஷ்ணு பள்ளிகொள்ளும் திருப்பாற்கடலும் அதைவிடச் சிறியதாகத் தோன்றும்.

உனைவந்துசார=உன்னில் இரண்டறக் கலந்துகொள்ள.

இருட்படலத்தை=மாயையாகிய இருளை.

மாற்றப்படாதோ=நீக்கி யருளலாகாதோ.

இத்தேகத்திலிருக்கும்போதே அவித்தையாகிய மாயையை யொழி

த்து பிரம்மான்ம ஐக்கியஞானம் பெறவேண்டுமாதலின் "இந்தச் சடலத்தை விடுமுன்னே புனைவந்துசார இருட்படலத்தை மாற்றப்படாதோ" என்றருளினர்.

"அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும்
*   *   *   *   *   *
கசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக் கடல்வடி வாவாயே"
(கைவல்யநவநீதம்)

(நமது மதத்தில் கூறப்பட்ட பேரின்பநிலை, இந்தத் தேகத்திலிருக்கும்போதே பிரத்தியட்ச அனுபவமாய் அங்கைநெல்லிபோல் காணக்கூடியது.)

---




## நம் தாய்நாடு எப்போது க்ஷேமமுறும்?

ஒரு நாடு என்ன நிலைமையிலிருந்தால் அது க்ஷேமமாகவிருக்கிறது என்று கருதப்படும்? அந்த நாட்டாருடைய வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களனைத்தும் போதுமான வரையில் கிடைத்து, அவர்கள் நிம்மதியாய் வாழ்ந்துகொண் டிருந்தால், அந்த நாடு க்ஷேமமாக விருப்பதாய்க் கருதப்படுகிறது. வாழ்க்கைக்கு வேண்டிய முக்கிய வஸ்துக்கள், உணவுக்கு வேண்டிய தானிய வகைகளும், உடைக்குவேண்டிய பருத்தி, பட்டு, சணல் முதலியவைகளுமே.

பூமி நீர்வளம் நிலவளமுடையதாயிருந்தால் இயற்கைப் பொருள்கள் நன்கு உற்பத்தியாகும். ஆனால் ஜனங்கள் விவசாயத்தில் கிருஷிசாஸ்திர அனுபவத்தை யுபயோகிக்கிறவர்களாகவும், உழைப்பாளிகளாகவும் இருத்தல்வேண்டும். இதோடு பல வகைக் கைத்தொழில்கள் தெரிந்தவர்களாகவும் வர்த்தகத்தில் ஊக்கமுடையவர்களாகவுமிருந்தால் அந்த நாட்டார் செல்வர்களாகவு மிருப்பார்கள். கைத்தொழில் தெரிந்திருந்தால் தங்கள் நாட்டில் உற்பத்தியாகும் இயற்கைப் பொருள்களைக் கொண்டு

தங்களுக்கு வேண்டிய பொருள்களைத் தாங்களே செய்துகொள்ளலாம். இதனால் நாட்டிலுள்ளவர்களுக்கு ஜீவனம் செய்யத் தொழில் கிடைப்பதோடு தங்கள் செல்வம் வெளிச் செல்லாமல் தங்கள் நாட்டிலேயே இருக்க நேர்கிறது.

இனி இத்தகைய அநுகூலங்கள் நமது நாட்டிற்கு எவ்வளவு உண்டு என்று பார்ப்போம்.

நமது நாடு நீர்வளம் நிலவளத்தில் இணையில்லாதது என்ற விஷயம் உலகமறிந்த உண்மையே. நம் நாட்டில், நமது இராஜாங்கம்போய் மஹம்மதிய இராஜாங்கம் வந்த பின்பும் விவசாயமும், வர்த்தகமும் கைத்தொழிலும் நல்ல நிலைமையிலேயே யிருந்தன.

இங்கிலாந்து சில ஆறுகளையுடையதே யெனினும் பூமி நம் நாட்டைப்போல் செழிப்புடையதல்ல. கடின பூமி. கோதுமை முதலிய இரண்டொரு தானியங்களும் சில காய்கனி வகைகளும் மட்டுமே யங்கு விளைவிக்கலாகும்; அதனால் அந்நாட்டார் உணவுக்கும் உடைக்கும் வேண்டிய அனேக பொருள்களை வெளி நாடுகளிலிருந்தே வரவழைத்துக் கொள்ளவேண்டும்.

அவ்வாறிருந்தும் அவர்கள் அத்தகைய முன்னேற்றமடைந்தும் செல்வமும் பலமும் பெற்றுமிருப்பானேன் ? உலகில் சகல வளப்பங்களிலும் இணையற்ற தான புண்ணிய பூமியைத் தாய் நாடாகப் பெற்ற நாம் இவ்வாறு இழிவான தரித்திர நிலைமையிலிருப்பானேன் ? அதற்குத்தக்க காரணமில்லாமலில்லை.

தங்கள் பூமி கடினமாயினும் அவர்கள் அதிக உழைப்பெடுத்துக்கொள்வதோடு, கிருஷிசாஸ்திரம், இரசாயன சாஸ்திரம், தாவர சாஸ்திரம் முதலியவற்றைக்கற்று பூமியைத் தக்கவிதமாய்த் திருத்தி அந்தந்தப் பயிருக்குத் தகுதியான எருவிட்டுப் பண் படுத்துகிறார்கள். அதனால் அவர்கள் பூமிகளில் பலன் வர வர அதிகரிக்கிறது. ஏராளமான கைத்தொழில்களைச் செய்து உற்பத்தியாகும் வஸ்துக்களை வெளி நாடுகளுக்கும் அனுப்பி நல்ல இலாபம் பெறுகிறார்கள். அன்னிய நாட்டிலிருந்து பஞ்சு, தானியங்கள் முதலிய இயற்கைப் பொருள்களை வரவழைத்து அவற்றிலிருந்து துணி, பலவகை உணவுப் பொருள்கள் முதலியவற்றைச் செய்து அவற்றால் அதிகமாக வர்த்தகம் செய்கிறார்கள். இவ்வாறு அவர்கள் செல்வமும் செல்வத்தால் பலமும் மற்ற சௌகரியங்களும் அடைந்தார்கள்.

இனி எல்லா சௌகரியங்களுமிருந்தும் நம் நாடு ஏன் இத் தகைய க்ஷீணதசை யடைந்தது என்பதைக் கவனிப்போம்.

1-வது. நம் நாடு விவசாய நாடாகவே யிருந்தும், அதற் குள்ள இயற்கை வளத்தால் நம் நாட்டார் பயிரிடுவதில் தக்க சிரத்தை யெடுத்துக்கொள்வதில்லை. 'காலால் மடைதள்ளல்' என்றே பழமொழி யுண்டாக்கிக் கொண்டார்கள். பாட்டன் பூட்டன் காலத்தில் நிலங்களுக்கு எப்படிச் சாதாரண எருவும் தழையும் போட்டுக்கொண் டிருந்தார்களோ, அப்படியே யெப் போதும் செய்துகொண்டு வந்ததால், வரவரக் குறையும் பூமியின் சத்துக்குப் பதிலாகப் போதுமான ஊட்ட மளிக்கப்படுவதில்லை. இதனால் வரவர விளைவு குறைந்துகொண்டே வந்துவிட்டது.

நமது விவசாயிகள் உற்பத்தியை அதிகமாக்க என்ன செய்ய வேண்டுமென்று சிந்திப்பதில்லை. விவசாயம் செய்வோர்க்குச் சாதாரணக் கல்விகூட இல்லை.

2-வது. பூர்வீகத்திலிருந்த கைத்தொழில்கள் கொஞ்சங் கொஞ்சமாய் அடியோடு குன்றிப்போயின. ஏனெனில் அன்னிய நாட்டார் இங்கு ஆதிக்கம் பெறத்தொடங்கியதும், தங்கள் நாட் டுக் கைத்தொழில் விர்த்தியடையவும் வர்த்தகம் பெருகவும் கருதி, நம் நாட்டுக் கைத்தொழில்களை நசுக்கிவிட்டார்கள். நாம் அணியும் துணிகள் முதற்கொண்டு மேல் நாட்டிலிருந்து வரத் தொடங்கின. அவை எந்திரத்தில் நெய்யப்பட்டவை. சற்று கண் ணுக்குப் பகரமாயும் விலையும் சரசமாயும் இருக்கவே நமது நாட் டார் அவற்றையே வாங்கத் தொடங்கிவிட்டார்கள். நம் நாட்டுக் கைத் தொழில்களில் முதன்மையானதாகிய நெசவுத்தொழில் ஒழிந்தே போயிற்று. மற்ற சாமான்களும் மேல் நாட்டிலிருந்து வருபவை, கண்ணைக் கவரத்தக்க வெளித் தோற்றமுடையவை யாதலால், நம்மவர் அவற்றையே வாங்கத் தொடங்கினார்கள்.

இதனால் நம் நாட்டுக் கைத்தொழில்கள் ஒழியவும் அத் தொழில்களால் ஜீவித்து வந்தோர் தரித்திர தசை யடையவும் நேர்ந்தது.

3-வது. இவற்றோடு கெட்ட காலத்திற்குத் தக்கவாறு நம்ம வர்க்கு மேல் நாட்டு நாகரீகப் பித்தேறத் தொடங்கவே, எதுவா யினும் சரி மேல்நாட்டுப் பொருளை வாங்கவும் நடையுடை பாவனை களில் மேல்நாட்டு ஆசாரத்தையே கைக்கொள்ளவும் தொடங்கி

விட்டார்கள். இதனால் குறைந்த வருமானமுடைய நம் நாட்டார்க்கு அதிகச் செலவு ஏற்பட்டது. தரித்திரம் அதிகரிக்கத் தொடங்கியது.

4-வது. நமது நாட்டில் உற்பத்தியாகும் இயற்கைப் பொருள்களெல்லாம் அன்னிய நாட்டார் கொண்டுபோய் வேறு பொருள்களாக்கி நமக்கே கொண்டுவந்து பெருத்த இலாபத்திற்கு விற்கத் தொடங்கினார்கள். இதனால் நமக்குண்டாகும் கெடுதிகள் எத்தகையவை யென்பதை நம்மவர் சற்றேனுமுணரவில்லை. மதிமயக்கம் கொண்டவர்கள் போல் தங்கள் சீர் கேடான நிலைமையையே தாங்கள் உணராதவர்களாய், துரைத்தனத்தாரிடமோ மேல் நாட்டு வர்த்தகரிடமோ அடிமைத் தொழிலமர்ந்து ஜீவிப்பது தான் மிக்க கௌரவமான தேவேந்திர போகம் என்று மதிக்கலானார்கள். கௌரவமானவையும் நமக்கு செல்வத்தை யளிப்பவையுமான விவசாயம் வர்த்தகம் கைத்தொழில் முதலியவற்றை அகௌரவமான இழிதொழில்களாக மதிக்கத் தொடங்கிவிட்டார்கள். உலகில் அநாதி காலந்தொடங்கி அடிமைகளாக இருந்தவர்களெல்லாம் சுயாதீனம் பெற முயற்சி செய்யும் இக்காலத்தில், அநாதி முதல் உன்னத நிலைமையிலிருந்த நம்மவர் சுயமதிப்பை மறந்து அடிமைத்தனத்தில் மகிழ்ச்சி யடையத் தொடங்கினார்கள். இது கலியின் மகிமைபோலும்.

இத்தகைய காரணங்களால் நம் தெய்வத் திரு நாடு, ஈசுவர பக்திக்கும், மெய்ஞ்ஞானத்திற்கும் பிறப்பிடமாகிய புண்ணிய நாடு அகௌரவத்திற்கும், இகழ்ச்சிக்கும், தரித்திரத்திற்கும் உறைவிடமாகி விட்டது.

இதிலிருந்து நாம் மீளும் வழியில்லையோ ? தக்க வழியில் முயற்சி செய்தால் எத்தகைய காரியமும் கைகூடும். இப்போது கடவுள் தயவால் நெடுநாட்களாகத் தூக்க மயக்கத்திலிருந்த நம்மவரில் பெரும்பாலர் விழிப்பிற்கு வந்துவிட்டார்கள். தங்கள் பூர்வீக உன்னத நிலையையும், அதிலிருந்து நழுவி வீழ்ந்திருக்கும் தற்கால இழிவான நிலைமையையும் உணர்ந்து, பழைய நிலைமையை யடைய முயற்சியும் செய்து வருவது யாவரும் அறிந்த விஷயமே.

ஆயினும் நம்மிடம் கெட்டகாலத்தால் உண்டாகியிருக்கும் குறைகளும் தீமைகளும் சில விருக்கின்றன. அவை நீக்கப்பட்டாலன்றி நாம் க்ஷேமமடைவது கூடாத காரியமே எனலாம். ஒரு

தேசத்தில் சில அறிவாளிகள் மட்டும் சரியான வழியில் நடந்து வர ஏனைய பெரும்பாலர் அந்த அறிவாளிகளின் புத்திமதிப்படி நடவாமலும், விஷயங்களைச் சரியாக உணராமலும், நமது முன்னேற்றத்திற்கு இடையூறாகிய தடைகள் இன்னவையென்றுணர்ந்து அவற்றை யொழிக்காமலும் இருந்தால், அந்தத் தேசம் ஒருபோதும் முன்னேற்றமடையாது. ஆகையால் நாம் கவனித்து நீக்கவேண்டிய குறைகள் எவை யெனப் பார்ப்போம்.

1. ஒரு நாட்டிலுள்ள ஜனங்கள் முன்னேற்றமடைய வேண்டுமாயின், அல்லது சிலர் ஒன்றுகூடி ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டுமாயின், முதலாவது ஒற்றுமைவேண்டும். ஒற்றுமை அத்தியாவசியம் வேண்டும். அதாவது பொதுவான காரியம் கை கூடுவதற்குச் செய்யும் முயற்சியில் நமக்குள்ளிருக்கும் சில்லரை பேதங்களையும், சச்சரவுகளையும், ஜாதிமத வித்தியாசங்களையும் சற்றும் கவனிக்காது, நாம் அனைவரும் பாரத மாதாவின் மக்களே என்ற திடஎண்ணங்கொண்டு, யாவரும் ஒரே மனதாயிருந்து வேலை செய்யவேண்டும். அத்தகைய ஒற்றுமை நம்மிடம் மிகக்குறைவு.

அதற்கு மாறாக மத விஷயத்திலும் ஜாதி விஷயத்திலும், அபிப்பிராய பேதங்களாலும் சுலபமாய்க் கட்சிப் பிரிவுகளை வளர்த்துக்கொண்டு அப் பிரிவினையால் ஒருவர்க்கொருவர் துவேஷங்கொண்டு, அத் துவேஷம் பொது நலத்திற்கு இடையூறு செய்யுமாறு நடந்து கொள்கிறோம்.

2. நம்மவரில் பெரும்பாலர் சுயநலத்தில் நாட்டம் வைத்துத் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு இடையூறு செய்கிறார்கள்.

தங்கள் செல்வாக்குக் குறையுமென்பதற்காக நாம் முன்னேற்றம் அடைவதைத் தந்திரமாய்த் தடுக்க முயல்வோருக்கு இச் சுயநலப் புலிகள் உதவிசெய்து தாய் நாட்டிற்குத் தீங்கிழைக்கிறார்கள்.

தாய் நாட்டிற்காகப் பாடுபடப் போகிறேன் என்று முன் வருவோரே, நகரசங்கம், மந்திராலோசனைச் சபை முதலியவற்றில் அவயவிகளாய்ச் சென்றபின், அற்பமாகிய சுய நலத்திற்கு ஆசை வைத்து தங்கள் நாட்டார்க்களித்த வாக்குத்தத்தத்தை யலட்சியம் செய்து, எதிரிகள் பட்சம் சேர்ந்துகொண்டு தாய் நாட்டிற்கு இடையூறே செய்யத் துணிந்து விடுகிறார்கள்.

3. விவசாயிகளுக்குத் தேசபக்தியே யின்னதென்று தெரியாது. நம் தாய் நாடு க்ஷேமமடைவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்கிற உணர்ச்சியே யவர்களுக்கில்லை. நம் நாட்டார்க்கு உணவு முதலியவைகளுக்கு அவசியமான தானியங்களையே நாம் முன்னே பயிர் செய்யவேண்டும் என்கிற அறிவுகூட இன்றி, மேல் நாட்டு வர்த்தகர் மூலமாய் கையில் ரொக்கப் பணம் கிடைப்பதற்கு ஆசை வைத்து, மேல் நாட்டிற் கேற்றுமதியாகும் நிலக்கடலை, அவுரி, சணல் முதலியவற்றையே விசேஷமாய்ப் பயிர் செய்கிறார்கள். சிலர் சுயநலங் கருதுவதால் நாட்டிற்கே கேடு விளைகிறது.

இவர்கள் நாம் அற்பப் பணத்தை யிச்சித்து நாட்டிற்குத் துன்பம் விளைவிக்கிறோம் என்று கருதுகிறார்களில்லை. ஏனெனில் அது அவர்கள் புத்தியிற் படவில்லை. அத்தகைய விஷயத்தை யவர்களுக்கு எடுத்துக்காட்ட முயல்வோரையும் காண்கிலம்.

4. இன்னொரு விஷயமிருக்கிறது. இது யாவற்றினும் மிக்க கொடிது. இதனால் உண்டாகும் தீங்குக்களவேயில்லை. இது இன்னும் வளர்ந்துகொண்டே போகும்படி விடப்பட்டால், முடிவில் உலகில் ஹிந்துக்கள் என்ற ஒரு ஜாதியேயில்லாமல் போய்விடும். நமது மதமும் போய்விடும். இதுதான் மேல் நாட்டு நாகரீக மயக்கம். இதனால் நம்மவர், கண் மூடித்தனமாய் மேல்நாட்டு ஆசாரம் எதுவாயினும் சரி அதைப் பின்பற்ற ஆசைப்படுகிறார்கள். எந்தப் பொருளாயினும் மேல் நாட்டு வெளித்தளுக்குடையதையே விரும்புகிறார்கள்.

இவர்கள் இப்படிச் செய்வதால் நம் நாட்டுக் கைத்தொழில் மங்கிப்போகிறது. வீண் செலவும் ஏற்பட்டு விடுகிறது. ஆசாரம் குன்றிப்போகிறது. நமது முன்னோர்கள் ஏற்படுத்தியுள்ள ஒவ்வொரு ஆசார விதியும் மதசம்பந்தமானதும் சுகாதார முதலிய சாஸ்திரங்களை யனுசரித்ததுமாகவே யிருக்கிறது. அப்படியிருக்க அவற்றை யலட்சியம் செய்வதால் நாம் ஒருபோதும் நன்மையுற மாட்டோம்.

இதுகாறும் நமது ஆடவர்களிற் பலர் இந்த நாகரீக மயக்கில் சிக்கி யுழன்றாலும் இன்னும் தெய்வசிந்தனை அடியோடு நீங்காமலும் நம் தேசாசார மதாசாரங்கள் முற்றும் ஒழிந்து

போகாமலுமேயிருக்கின்றன. அப்படி இருப்பதற்குக் காரணம் நம் பெண்மணிகள் அவற்றைப் பாதுகாத்து வருவதேயாகும். அவர்களை யந்த அன்னிய நாட்டு ஆசாரங்களில் பழகும்படி விட்டு விடின் சீக்கிரத்தில் ஹிந்துக்கள் என்பதும் ஹிந்து மதம் என்பதும் அடியோடு இல்லாமற்போம்.

5. நாம் கெடுவதன்றி நமது மக்களையும் அந்த ஆசாரத்தில் பழகவிட்டுக் கெடுக்கிறோம். தற்கால மாணவர்களின் நிலைமையையும் அவர்களின் கல்வி முறையையும் கவனித்துப் பார்த்தால் அப் பயங்கரமான உண்மை பிரத்தியட்சமாய் விளங்கக் காணலாம்.

நேயர்களே! இக் குறைகளை யெல்லாம் நாம் நீக்கினாலன்றி நம் நாடு முன்னேற்றமடைவது மிக அரிதே. இக் குறைகள் எப்படி நீங்கும்?

(1) நம்மவர் கௌரவம், கீர்த்தி, பட்டம் முதலிய சுயநல இச்சையை யறவே விட்டுவிடவேண்டும். தாய் நாட்டின் க்ஷேமத்தைப்பற்றிய பொதுநல காரியங்களைச் செய்யவேண்டி யிருக்கையில் நமக்குள் இருக்கும் ஜாதி பேதம், மதபேதம், சில்லரைச் சச்சரவு, கட்சிபேதம் முதலிய யாவற்றையும் ஒருபுறம் கட்டி வைத்துவிட்டு, யாவரும் பாரதமாதாவின் மக்களாகிய சகோதரர், நாம் செய்யவேண்டிய காரியம் தாய் நாட்டின் காரியம் என்ற ஒரே எண்ணத்தோடு, மனம் ஒருமித்து வேலை செய்யவேண்டும். ஒரு ஸ்தானத்திற்குத் தகுதியுடைய ஒருவர் அபேக்ஷகராக நிற்கும்போது, மற்றொருவர் கௌரவம், சுயநலம், கட்சிபேதம் இவற்றைக் கருதி அதற்குப் போட்டி போடலாகாது.

இம்மாதம் இச்சென்னையில் நடந்த நகர சங்கத் தேர்தலின் போது அபேக்ஷகர்கள் வாக்குபெற முயன்றதில் இத்தகைய கட்சிபேதம் மிக்க அகௌரவமான விதமாய் நிகழ்ந்தது. சுயநலங் கருதி அபேக்ஷகராய் வருவோர் தாம் ஜெயம்பெற அக்கிரம காரியங்களையும் செய்யத் துணிகிறார்கள்.

(2) நம் நாட்டில் உற்பத்தியாகும் பண்டங்களில் நமக்கு அவசியமான தானிய வகைகள், பருத்தி முதலியவற்றை அன்னிய நாடுகளுக்கு அனுப்பலாகாது. நமக்கு வேண்டிய அளவு இயற்கைப் பொருள்களை நாட்டிலேயே வைத்துக்கொண்டு நமக்கு

அவசியமான பொருள்களைச் செய்துகொள்ள வேண்டும். நாம் உண்ணும் அரிசி கோதுமை முதலியவற்றை மேல் நாட்டிற் கனுப்பிவிட்டால் அவை சாராயமாகவும் வேறு உணவுப்பொருள் களாகவும் மாறி இங்கு வந்து நமக்கே பெருங்கெடுதி விளைவிக் கின்றன.

(3) கிராம வாசிகளுக்கு மேற்கண்ட விஷயம் நன்முக விளங் கும்படி போதிப்பதோடு, நம் நாடு எத்தகைய நிலைமையிலிருக் கிறதென்பதையும், அது முன்னேற்றமடைவதற்குத் தாங்கள் செய்யவேண்டிய கடமைகள் இன்னவையென்பதையும் அவர்க ளறியுமாறு செய்யவேண்டும். நமது நாட்டு விவசாயிகளுக்கு இப் போது 'நாம் நம் தாய் நாட்டின் க்ஷேமத்தைக் கவனிக்கவேண் டும்' என்ற உணர்ச்சியே கிடையாது. அவர்களுக்கு அவ்வுணர்ச்சி யுண்டாகும்படி செய்யவேண்டும்.

(4) மேல் நாட்டு நாகரீகத்தில் நம்மவர்க்கிருக்கும் மயக்கம் ஒழியவேண்டும். எல்லாவற்றிற்கும் வெளித் தளுக்கைக்கண்டு மயங்கி அன்னிய நாட்டுச் சாமான்களையே வாங்குவதை யொழி த்து, நமது நாட்டில் செய்யப்பட்டவை நாணயக் குறைவாய்த் தோன்றினும் அவற்றையே வாங்கவேண்டும் என்ற அபிமான முண்டாகவேண்டும். மேல்நாட்டாரிடம் இக்குணம் காணலாம்.

மேல் நாட்டாருக்குள்ள இத்தகைய நற்குணங்களை நம்மவர் பின்பற்றுவதைவிட்டு, நமக்குச் சற்றும் தகாத அவர்கள் ஆசா ரங்களை மட்டும் கைக்கொள்வது மூடத்தனமல்லவோ.

(5) மிக முக்கியமான இன்னொரு விஷயமிருக்கிறது. நமது ஆண் மக்களை முன்னே சீர்திருத்தம் செய்யவேண்டும். இப் போதுள்ள நமது மாணவர்களின் நிலைமையைக் கவனித்துப் பார்த்தால், இது எவ்வளவு அவசியமென்பது விளங்கும். மாண வர்களின் ஆசார ஒழுக்கம் நடவடிக்கைகள் மிக்க சீர் கேடடை ந்துவருகின்றன. "ஒதலிற் சிறந்தன்றொழுக்கமுடைமை" என்று நம் மூதாட்டியார் கூறிய வாக்கைக் கவனிப்பாரில்லை.

(1) இக்கால மாணவர்களுக்கு உபாத்தியாயரிடம் பக்தி கிடையாது. ஆங்கிலமே ஆரம்பத்தில் கற்பிக்கப்படுவதாலும், தாய்ப்பாஷை யலட்சியமாகக் கருதப்படுவதாலும் அவர்களுக்கு நமது ஆசாரத்தின் உயர்வு தெரியாமல் போகிறது. இதோடு அன்னியருடைய தகாத ஆசாரத்தின் வாசனையே யேறுகிறது.

இதனால் ஈசுர சிந்தனையும் நம் ஆசாரமும் அவர்களிடம் குன்றிப் போகின்றன.

(2) மாணவர்கள் ஆரம்பத்திலேயே கண்ணாடி போட்டுக் கொள்வது, சிகரெட், பீடி பிடிப்பது, சீட்டாடுவது இவற்றில் பழகிவிடுகிறார்கள். பெரியோரிடம் வணக்க ஒடுக்கம் கிடையாது.

(3) பாடசாலையில் இவர்களது ஒழுக்கம் நடக்கைகள் சற்றும் கவனிக்கப்படுவதில்லை. மேல் வகுப்புகளில் ஏற ஏற அவர்களிடம் மேல்நாட்டு ஆசாரங்கள் விர்த்தியடைவதே பிரத்யக்ஷமான பயனாகவிருக்கிறது.

(4) இவர்கள் கற்கும் கல்வியோ இகம் பரம் இரண்டில் ஒன்றுக்கேனும் பயன்படாத கல்வியே. அது, பிற்காலத்தில் இவர்கள் துரைத்தனத்தாரிடம் அல்லது மேல்நாட்டு வர்த்தகர்களிடம் அடிமைத் தொழில் செய்வதற்கே பயன்படக் கூடியது.

பிற்காலத்தில் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு உழைக்க வேண்டியவர்கள், நம் முன்னோரின் கீர்த்தியைக் காப்பாற்றி, தாய் நாடு பூர்வ நிலைமையை யடையும்படி செய்யும் பொறுப்பை யேற்றுக்கொள்ளவேண்டியவர்கள் இம்மாதிரி வழியில் விடப்பட்டிருந்தால்,இப்போது தாய் நாட்டிற்காக ஆன்றோர் படும்பாடெல்லாம் என்ன பயனைத் தரும்? ஒரு விருக்ஷத்தின் வேரைப்புழுக்கள் அரித்துக்கொண்டிருக்க, நாம் இலைகளுக்கு நீர் தெளித்துக் கொண்டிருப்பதுபோ லாகுமேயன்றி வேறில்லை.

மாணவர்கள் நிலைமை யுடனே சீர்திருத்தப் படவேண்டும். அவர்களுடைய ஆசாரஒழுக்கங்கள் பெற்றோராலும்,உபாத்திமார்களாலும் கவனிக்கப்படவேண்டும். அவர்கள் கல்விமுறை திருத்தப்படவேண்டும்; தாய்ப் பாஷைக் கல்வியே முதலிலளிக்கப்பட வேண்டும். ஈசுர பக்தி, தேசபக்தி, தன் மதிப்பு முதலியவற்றை யூட்டும் கல்வியே அவர்களுக்களிக்கப்படவேண்டும். கைத்தொழிலும் கிருஷி சாத்திரமும் எல்லா பாடசாலைகளிலும் போதிக்கப் படவேண்டும். பிற்காலத்தில் உலக வாழ்க்கையில் அவர்களுக்கும் தேசத்திற்கும் பயனளிக்கத்தக்க கல்வியே கற்பிக்கப்பட வேண்டும். நம் பூர்வீக உன்னத நிலைமையையும், நம் நாகரீகம், முன்னோரின் வீரம், ஞானம், தெய்வபக்தி, ஆசார ஒழுக்கங்கள் இவற்றின் மேன்மையையும் அவர்கள் உணருமாறு செய்யவேண்

டும். அப்போதுதான் அந்த நிலையை நாம் அடையவேண்டுமென்ற ஊக்கம் அவர்களுக்குண்டாகும்.

கல்வி கற்றபின், அடிமைத் தொழில் செய்வது மிக்க இழி வென்றும், விவசாயம் வர்த்தகம் கைத்தொழில் இவற்றைச் செய் வதே கௌரவமென்றும், அப்படிச் செய்தால்தான் நாம் செல்வ மும் கௌரவமும் பெறுவோம், நம் தாய் நாடும் முன்னேற்ற மடையுமென்றும் நம் மக்கள் நன்றாக உணர்ந்து அவ்வழியிலொழு கும்படிச் செய்யவேண்டும். நம் பூர்வமுறைப்படி நம் மக்கள் தேகப்பயிற்சி யடையும்படி செய்யவேண்டும். இது அவர்களின் சுகஜீவியத்திற்கு மிக்க அவசியமானது. பெற்றோர் இவற்றை யெல்லாம் கவனிக்காமல் தம் மக்களை ஆங்கில பாடசாலைக் கனுப்புவதோடு தமது கடமை யொழிந்ததென்று கருதியிருந் தால் நம் நாடு ஒருபோதும் க்ஷேமமடையாது; அதற்குப் பதி லாக நமது ஆசாரம், மதம், நாம் ஒரு ஜாதியார் என்ற யாவும் மறைந்துபோய் நாம் ஜாதி குலமில்லாத அடிமை வகுப்பில் சேர்க் கப்படுவோம். அப்படி நேர்வதைவிட இப்பாரததேசமே கடலில் மறைந்து போவது நலம்.

"மானம் படவரின் வாழாமை முன்னினிதே"

அநாதிகாலந்தொட்டு நமது புண்ணிய பூமிக்குப் பெருமை யும் புகழும் அளித்துவரும் சச்சிதானந்தப் பெருந்தகையாம் பரம் பொருள்தான் நமக்கு அருள்புரியவேண்டும். "கடவுளை நம்பி னோர் கைவிடப்படார்."

ஓம்தத்ஸத்.

---

## ஹிந்து மஹம்மதிய சம்பந்தம்.

சகோதர சகோதரிகளே! புண்ணிய பூமியாகிய நம் பாரதநாட்டைத் தாய்நாடாகவுடைய ஹிந்துக்களும் முஹம்மதியரும் ஒற்றுமையா யிருக்க வேண்டியது தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியம் என்பது யாவரு மறிந்த விஷயம். முற்காலத்தில் முஹம்மதியர் இங்கு அரசாண்டு வந்த காலத்தில் இவர்களிருபாலர்க்கும் இருந்த சம்பந்தத்தைப்பற்றி இதுகா றும் தவறான வதந்தியே நிகழ்ந்துகொண்டிருந்தது. இப்போது வரவர அதன் உண்மை வெளியாகி வருகிறது.

இது சம்பந்தமாய் இராபர்ட்ஸன்பேட்டை (கோலார்) ஜீவகாருண்ய சங்கத்தார் வெளியிட்டுள்ள "முஹம்மதிய அரசாக்ஷியும் ஆநிரைகாத்த

லும் " என்ற சிறு புத்தகத்தில் அடங்கியுள்ள விஷயம் யாவரும் அறியத் தக்கதாகையால் அதை யீண்டு பிரசுரிக்கிறோம் :—

(இஃது ஸ்ரீமான் டாக்டர் சையத் முஹம்மத் PH. D. அவர்கள் எழுதிய சரித்திர ஆராய்ச்சியின் மொழி பெயர்ப்பு.)

## முஹம்மதிய அரசாட்சியும் ஆனிரை காத்தலும்.

இந்தியாவில் முஹம்மதிய அரசர்கள் கோ வதை புரியும் விஷயத்தில் என்ன நிலைமையை வகித்திருந்தார்கள் என்பதையும், இவ்விஷயத்தில் அவர்கள் ஹிந்துக்களது மன உணர்ச்சியை எவ்வகையில் கெளரவித்தார்கள் என்பதையும், ஹிந்துக்களிலும் முஹம்மதியரிலும் பெரும்பான்மையோர் அறியாமல் இருக்கிறார்கள். இந்த விஷயத்தை ஆராய்ச்சி செய்து, முஹம்மதிய அரசர்கள் இந்தியாவில் தனிச்செங்கோல் செலுத்தி வாழ்ந்த நாட்களில் ஹிந்துக்களது மத உணர்ச்சியை எவ்வாறு, எவ்வளவுதூரம், அவர்கள் கெளரவப்படுத்தி வந்தார்கள் என்பதையும், இந்த விஷயத்தில் அவருடைய முன்னோர்கள் பரந்த நோக்கமும், விரிந்த அறிவும், மிகுந்த பெருந்தன்மையும் உடையவர்களாக விளங்கினார்கள் என்ற விஷயத்தையும் என் முஹம்மதியத் தோழர்களுக்கு எடுத்துக்காட்ட சில சரித்திர சம்பந்தமான விஷயங்களைக் கூற விரும்புகின்றேன். குறுகிய அபிப்பிராய பேதத்தால் மிகவும் கடினமானதாகவும் குழப்பமுள்ளதாகவும் நமக்குத் தோன்றுகின்ற இந்த விஷயம் அவர்களுக்கு யாதொரு கஷ்டத்தையும் விளைக்கவில்லை. அக்காலத்தில் அரசு செலுத்தி வந்த முஹம்மதிய அரசர்கள் இதனைத் தனித்த ஒரு மத சம்பந்தமான விஷயம் என்று கருதி ஹிந்துக்களது கொள்கைகளுக்கு விரோதமாக நடந்துகொண்டு இருந்தார்களானால் அவர்களைத் தடுப்பவர் ஒருவரும் இல்லை. ஆனால் அவர்கள் ஹிந்துக்களைத் தங்களுக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்றும் அடங்கியவர்கள் என்றும் கருதாமல் ராஜ்ய பரிபாலனத்தில் அவர்களும் தங்களைப்போலவே சமபாத்தியதையுடையவர்கள் எனக்கருதி அவர்களைத் தகுந்தவண்ணம் பாராட்டிக் கெளரவித்தார்கள். ஹிந்துக்களது மனோபாவத்தையும் மத வபிப்பிராயங்களையும் நன்றாக உணர்ந்து முஹம்மதிய அரசர்கள் அவர்களைப் பெரிதும் பாராட்டி, அரசாளும் விஷயத்திற் சம்பந்த முடையவர்களாக்கினார்கள் என்ற விஷயத்தை என் ஹிந்து சகோதரர்கள் நன்கு ஆய்ந்தறிவார்களாக. தங்களது அரசாட்சியில் முஹம்மதியர் ஹிந்துக்களை எவ்வகையில் நடத்திவந்தார்கள் என்பதும், நாட்டை ஆளும் விஷயத்தில் அவர்களை இவர்கள் எவ்வளவு பொறுப்பு உள்ளவர்கள் ஆக்கினார்கள் என்பதும் எக்காலத்தும் எடுத்துப் பேசவேண்டியதொரு சரித்திர சம்பந்தமான முக்கிய விஷயம்.

### கோவதைத் தடை.

ஹிந்துக்களுக்குப் பசுவதைச் சம்பந்தமாக ஏற்பட்டுள்ள மனவுணர்ச்சியை முஹம்மதிய அரசர்கள் பெரிதும் பாராட்டி அவர்களைக் கெளரவித்

தார்கள் என்பதை எடுத்துக் காட்டுவதே இந்த வியாசத்தின் சிறந்த கருத் தாம். தங்களது ஆளுகை ஆரம்பித்த நாள் முதல் கோவதை விஷயத்தில் ஹிந்துக்களுக்கிருக்கும் மனோ நிலையை நன்றாக அறிந்து, அவர்களைத் தங் களது ஒரே நாட்டினராகவும், சகோதரராகவும் பாவித்துத் தேசத்தை ஆளவேண்டுமென்பதே அவர்களது உட்கருத்து. ஆகையினாலேயே அவர்கள் இவ்விஷயத்தில் ஹிந்துக்களின் மனப்பாங்கை ஊன்றி உணர் ந்து அவர்கள் மனம் புண்படாவாறு நடந்துகொண்டார்கள். முஹம்மதிய அரசாட்சியின் ஆரம்பத்திலிருந்து பசுக்கொலை புரிபவர்களுக்கு கொல்லப் பட்ட பசுவொன்றற்கு 12 ஜேத்தல் வீதம் வரி விதிக்கப்பட்டிருந்தது. பெரோஜ் ஷா என்னும் அரசர் அரசுபுரியுங் காலத்தில் பசுவதை செய் வோர்கள் இவ்வரி அதிகமானதென்றும் தங்களால் தாங்கமுடியாதென் றும் குறைகூறிக்கொள்ள அரசர் அதனைத் தள்ளிவிட்டார். இந்த விவ ரங்களெல்லாம் சரித்திரங்களில் காணக்கூடவில்லை யென்றாலும் இதன் அபிப்பிராயம் எல்லாம் பசுவதையைத் தடுப்பதற்கேயன்றி வேறல்ல. இந்த வரி இந்தியாவில் முஹம்மதிய அரசாட்சி ஏற்பட்ட 200 வருஷங் கள் வரைக்கும் அதாவது பெரோஜ் ஷா டோக்லாக் காலம் வரைக்கும் விதிக்கப்பட்டே வந்தது. 'கோவதையை நிறுத்து' என்று சொல்வதற் குப் பதிலாகவே பழைய முஹம்மதிய அரசர்கள் இவ்வழியைக் கையாண்டு வந்தார்கள் என்பதற்கு ஓர் ஐயமுமில்லை. இவ்வரிக்கு 'ஜஸிரி' என்று பெயர். முஹம்மத் ஷா டோக்லாக் காலத்தில் அரசரது மடைப்பள்ளி யில் கோ மாம்சம் சமைக்கப்பட்டதுமில்லை; அரசர் அதனை யுண்டது மில்லை. அரசரது மடைப்பள்ளியைப்பற்றிப் பலவிதமாக அநேக சரித வாசிரியர்கள் வர்ணித்திருந்தும் கோவதையைப்பற்றி ஒரு சிறிதும் கூறப் படவில்லை. பார்ஹத்தல் முல்க் என்பவர் கூர்ச்சரத்துக்குக் கவர்னராக நியமிக்கப்பட்டு இரண்டாவது கியாசுடீன் டோக்லாக் காலம் வரைக்கும் அதே பதவியில் இருந்தார் என்றும், அப்போது ஹிந்துக்களுக்குப் பலவித மான நன்மைகளைச் செய்ததோடு நாட்டில் கோவதை புரிய அநுமதி அளிக்கவில்லை என்றும் சரித்திர ஆசிரியர்கள் திட்டமாகக் கூறுகிறார்கள். நசுருதீன் குஷ்ரோ என்னும் சுல்தான் காலத்தில் ஹிந்துக்களுக்கு நல்ல செல்வாக்கு இருந்ததென்றும், அரசன் தன் நாட்டில் கோவதை நடக்கவே கூடாதென்று முயற்சிசெய்து அதனை அறவே யொழித்தார் என்றும் தெரிகிறது. பெரோஜ்ஷா டோக்லாக் காலத்தில் நிறுத்தப்பட்ட ஜஸரி வரி மறுமுறையும் இந்த அரசனுக்குப் பின்பு விதிக்கப்பட்டதாயும், இதனை அக்பர் பின்பு மாற்றியதாகவும் சரிதங்கள் கூறுகின்றன. அக்பர் சக்ரவர்த்தி கோவதையை முழுதும் தடுத்துவிட்டதினால் வரிபோடும் அவ சியம் இல்லாமற்போக அது நிறுத்தப்பட்டது போலும்.

ஓர் ஐரோப்பிய யாத்திரிகரின் அபிப்பிராயம்.

பதினேழாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்திருந்த ஓர் ஆங்கிலேயு

யாத்திரிகர், ஹிந்துக்கள் பசுக்களை மிகவும் பாராட்டிப் போற்றி வந்தார்கள் எனவும், பசுவதையையும் மனுஷவதையையும் ஒன்றாகவே கருதினார்கள் எனவும் எழுதி இருக்கிறார். இதிலிருந்து ஹிந்துக்களது மனோபாவங்களைத் தடுப்பதற்கு எவ்வித பிரயத்தனமும் மஹம்மதியர்கள் செய்ததில்லையென்பதையும், ஹிந்துக்களுடைய மன உணர்ச்சி முதலியவற்றையெல்லாம் அவர்கள் கௌரவித்துப் போற்றி வந்தார்கள் என்பதையும், இவ்விஷயத்தை அங்கு வந்து போகும் பிரயாணிகளும்கூடக் கஷ்டமில்லாமல் சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம் என்பதையும், ஹிந்துக்கள் பசுவதை செய்தல் தகாது என்பதைப்பற்றிப் பஹிரங்கமாகப் பிரசாரணம் செய்யலாம் என்பதையும் இதனால் வெள்ளிடை விலங்கல் என அறிகிறோம்.

### பேபர் தன் மகனுக்குக் கூறிய புத்திமதிகள்.

மொகலாயர் இந்தியாவில் தங்களது அரசாட்சியை நிலைநிறுத்தியபின் பேபர் சிம்மாசனம் ஏறினார். அவர் தாம் அரசாண்ட சில வருஷங்களுக்குள்ளாக மதவிஷயத்தில் இந்துக்களுக்குள்ள மனோபாவத்தை நன்றாக அறிந்து, தன் மகனாகிய ஹுமாயூனுக்கு அந்தரங்கமானதும், இவ்விஷயச் சம்பந்தமானதுமான சாசனம் ஒன்றை எழுதிவைத்துத் தன் மகனை அதிற் கண்டபடி நடந்துகொள்ளும்படி அறிக்கையிட்டார். இதன் மூல பத்திரம் போபால் நகரத்து இராஜாங்கப் புத்தகாலயத்தில் இப்போதும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. நவாப் கர்னல் ஹமீத் உல்லாகான் சாயபு அவர்கள் பேருதவியால் எனக்கு அம்மூலப்பிரதியின் புகைப்படமொன்று கிடைத்தது. அச்சாசனத்தின் மொழிபெயர்ப்பு கீழ்வருமாறு:—

“ என் அரிய மைந்தனே! பலவகை மதங்களைத் தழுவுகின்ற பற்பலர் இந்தியாவில் வசிக்கிறார்கள். மன்னர் மன்னனாகிய சர்வேசுவரன் கருணை கூர்ந்து இவ்வரசாட்சியை உன்னிடம் ஒப்புவித்ததற்கு நீ அவரிடத்தில் மிகுந்த நன்றி செலுத்திவரக் கடமைப்பட்டிருக்கின்றாய். ஆதலின்,

(1) உன்னுடைய மனத்தில் மதச் சம்பந்தமான குரோதங்கள் ஏற்பட இடங்கொடாதே; உன் அரசாட்சியில் உள்ள ஒவ்வொரு வகுப்பாரின் மதவழக்கங்களையும் கொள்கைகளையும் நன்கு ஆதரித்துப் பக்ஷபாதமின்றி எல்லார்க்கும் பொதுவாக நீதியை வழங்கி வருவாயாக!

(2) முக்கியமாகக் கோவதை செய்தலை அறவே ஒழித்திடுக! இங்ஙனம் செய்தலால் இந்தியரது மனத்தைக் கொள்ளைகொண்டவனாவாய். இந்நாட்டினர் உன்னிடத்து நன்றி பாராட்டி அன்புரிமை கொள்ளுதற்கு இதுவே சிறந்த மார்க்கமாகும்.

(3) எம்மதத்தினரது கோயில்களையும் நீ அழிக்காதே; எப்பொழுதும் நீதியை விரும்புகிறவனாக இரு; அப்பொழுதுதான் உன்னுடைய குடிகளும் நீயும் அன்பு, ராஜவிசுவாசம் என்னும் கயிறுகளால் பிணிக்கப்படுவீர்கள். தேசமெங்கும் திருப்தியும், மனவமைதியும் குடிகொண்டிருக்கும்.

(4) கொடுமையென்னும் வாளேந்தி ஆட்சிபுரிவதினும் அன்பென்னும் வாளேந்தி ஆட்சி செலுத்துவதே இஸ்லாம் மதம் பரவுவதற்கு ஏற்ற சாதனமாகும்.

(5) ஷியாக்களுக்கும் ஸுன்னிகளுக்கும் உள்ள பரஸ்பர பேதாபேதங்களை நீ எப்போதும் கவனிக்காதே. ஏனெனில் அவை இஸ்லாம் மதத்தைப் பலவீனமாக்கும் கருவிகளாம்.

(6) உன்னுடைய குடிமக்களின் குணங்களை யெல்லாம் வருஷத்தின் மாறிமாறி வரும் பருவங்களாகவே மதித்திடு. அப்போதுதான் இராஜாங்கம் என்னும் சரீரம் யாதொரு பிணியுமின்றி சுகத்தோடு வாழும்.''

பின்வந்த அரசர்கள்.

பேபர் இந்தியாவில் பிறந்து வளர்ந்த ஓர் அரசர் அல்லர். அவர் இந்தியாவை ஜயித்து அரசாண்ட மன்னரேயாயினும், தமது நாட்டிலுள்ள ஹிந்துக்களிடத்தில் மிகுந்த அன்பையும், ஆதரவையும், பெருமதிப்பையும் காட்டிச் சந்தோஷமாய் நாட்டை அரசாளவேண்டு மென்பதே முக்கிய கருத்தாகக் கொண்டிருந்தவர். வெளிநாட்டிலிருந்து வந்து நமது நாட்டை ஜயித்து ஆண்ட ஓர் அரசருக்கே இவ்விதக் கொள்கைகள் இருந்தன வென்றால் நமது நாட்டிலேயே பிறந்து, அல்லது நமது நாட்டையே தமது தாய் நாடாகக்கொண்டு ஹிந்து ரத்தம் தம் தேகத்தில் பரவப்பெற்றிருக்கும் அவருக்குப் பிற்காலத்தில் தோன்றிய மற்றைய மொகலாய அரசர்கள் எங்ஙனம் நடந்திருப்பார்கள் என்பது கூறாமலே அமையுமன்றோ?

அக்பர்.

அக்பர் மன்னர் இடமகன்றதாகிய தம்முடைய இராஜ்ஜிய முழுமையிலும் கோவதை செய்யக்கூடாதென்று தடுத்துக் கொடிய விதிகளைப் பிறப்பித்தார். இவ்விஷயங்கள் எல்லாம் ஐனி அக்பரி (Aini Akbari) என்ற சட்ட நூலில் பரக்கக் காணப்படுகின்றன. இவருக்குப் பின் வந்த அரசர்கள் இவ்விதியை முழுவதும் கவனிக்காமல் இருந்தபோதிலும் இதைத் தள்ளாமலேயே வைத்திருந்தார்கள். ஜிஹாங்கீர் என்னும் அரசர் தம் ஆட்சியில் பசுவதையை ஒழித்ததல்லாமல் அக்பரின் பிறந்த தினமாகிய ஞாயிற்றுக்கிழமையிலும், தாம் சிம்மாசனம் ஏறிய தினமாகிய வியாழக்கிழமையிலும் தம்முடைய நாட்டில் எவரும் எத்தகைய பிராணியையும் கொல்லக்கூடாதென்றும் அந்நாட்களில் மிருகவேட்டையும் ஆடக்கூடாதென்றும் கட்டளையிட்டார்.

முடிவுரை.

இவ்வாறாக முகம்மதிய அரசர் பசுவதையைப் பலவகையிலும் தடுத்தார்கள். நமது நாட்டுப் பழைய சரித்திரங்களை ஆராய்ந்து வாசித்துப் பார்ப்போமானால், தமது குடிமக்களாகிய ஹிந்துக்களது மனோபாவங்களையும் மதவிஷயங்களையும் முஹம்மதிய அரசர்கள் எவ்வகையில் போற்றி

வந்தார்கள் என்ற விஷயம் நமக்குப் புலனாகாமற் போகாது. ஹிந்துக்களிற் சிலர், தங்களைச் சார்ந்தவர்களை முஹம்மதிய அரசர்கள் ஹிம்சித்து வந்தார்கள் எனத் தப்பிதமாக அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால் விஷயங்களைச் சாவதானமாகவும் பக்ஷபாதமில்லாமலும் ஊன்றிப்பார்ப்போமேயானால் இது பொய்யெனவே தோன்றும். இந்த விஷயத்தில் மாத்திரமன்றி முஹம்மதியர்கள் ஹிந்துக்களது இன்பதுன்பங்களிலும், சுகதுக்கங்களிலும், மற்றும் எல்லாப் பண்டிகைகளிலும் அவர்களோடு கலந்து கொண்டாடினார்கள். தீபாவளிப் பண்டிகையன்று ஒரு பூஜா தர்பார் நடத்தப்படும்; அநேக பிராமணர்கள் அரசரது உத்தியான வனத்திற்குப் பசுக்களைக் கொண்டுவந்து காட்டிப் பலவகைப் பரிசுகள் பெற்றுப் போவார்கள். மேலும் தசராப்பண்டிகையை அரசனே நேரிலிருந்து நிறைவேற்றுவதுண்டு. சிவராத்திரியன்று அரசர்கள் ஹிந்துயோகிகளை எழுந்தருள்வித்து அவர்களுக்கு அமுது அளிப்பார்கள். சிற்சில சமயங்களில் அரசன் தானே ஹிந்து யோகிகள் இருக்கும் இடத்தைத் தேடித் திரிந்து அவர்களோடு கலந்து உறவாடுதலும் உண்டு. இதற்கு அறிகுறியாக, இங்கிலாந்தை ஆண்ட முதலாம் ஜேம்ஸ் மன்னனால் ஜியாங்கீரின் இராஜ சபைக்கு இராஜதூதராக அனுப்பப்பட்ட ஸர்தாமஸ்ரோ என்பவர், ஜியாங்கீர் அடிக்கடி ஹிந்து யோகிகளைத் தரிசித்துப் பேசுவதையும், ஒருமுறை அரசசபையின்கண் அரசரே தன் பக்கத்தில் கௌபீனதாரியாய் உட்கார்ந்திருந்த யோகியாரொருவரை மிக்க பக்தியுடன் "தந்தாய்" என விளித்துப் பேசிக்கொண்டிருந்ததையும் தாம் நேரில் பார்த்ததாக எழுதியிருக்கின்றார்.

குறிப்பு:—நமது நாட்டில் முஹம்மதிய அரசாக்ஷியைப்பற்றி வரையப்பட்ட சரித்திரங்கள் கிடையா. அக்காலத்திலிருந்த பண்டிதர்களில் சிலர் துண்டுதுண்டாய்ச் சில அரசர்களின் சரித்திரங்களை வரைந்திருக்கிறார்களெனினும் அவை அரபி, உருது பாஷைகளில் வரையப்பட்டபடியால் நம்மவர்களுக்கு அவற்றைப்பற்றி யொன்றும் தெரியாது.

பாடசாலைகளில் நமது மக்கள் வாசித்த இந்துதேச சரித்திரத்தில் அடங்கியுள்ள விஷயங்களே நம்மவர்களுக்குத் தெரியும். முஹம்மதிய அரசர்கள் நமது கோயில்களை யிடித்து நமது மாதரை அக்கிரமமாக நடத்தி நம்மை மிக்க கொடுங்கோன்மையாய் ஆண்டுவந்தார்கள் என்று வாசிப்போர்க்கு அபிப்பிராய முண்டாகுமாறே அச்சரித்திரம் வரையப்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல; ஹிந்து இராஜாங்ககாலம் முதலே நாம் ஒழுங்கின்றி, நாகரீகமின்றி மிக்க கேவலமான நிலைமையில் கிடந்ததாகவும், மேல்நாட்டு துரைத்தனம் ஏற்பட்டதுமுதலே நாம் அறிவும் நாகரீகமும் க்ஷேமமுமடைந்து வருவதாகவும் கருதப்படுமாறு அச்சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. முஹம்மதிய அரசரில் சிலர் கொடுங்கோன் மன்னராகவிருந்தார்களென்பதும், அவர்களது உத்தியோகஸ்தரில் சிலர் அக்கிரமங்

களைச் செய்தார்களென்பதும் மெய்யாகவே யிருக்கலாகும். அத்தகைய உத்தியோகஸ்தர் சிலர் தம் அரசரால் தண்டனை யடைந்து மிருக்கிறார்கள். ஆனால் பெரும்பாலான அரசர்கள் மேற்கண்டவாறு நீதியாகவே ஹிந்துக்களிடம் அபிமானமுடையவர்களாய் நடந்துகொண்டு அவர்களால் புகழப்பட்டிருக்கிறார்கள். எத்தனையோ ஹிந்துமத மகான்களும், சந்நியாசிகளும் முஹம்மதிய அரசர்களிடம் மடங்கட்ட பூமியும், அன்னதான சம்ரக்ஷணைக்கு மானியமும் பெற்றிருக்கிறார்கள். இத்தகைய விஷயங்கள் நம் சிறுவர் வாசிக்கும் சரித்திரங்களில் கூறப்படவில்லை. இதனால் நம்மவர்களுக்குச் சிறு வயதிலிருந்தே முஹம்மதியர்மேல் கெட்ட அபிப்பிராயமும் வெறுப்பும் உண்டாக நேர்ந்தது. அவர்களுடைய மதமே குரூரமானதெனக் கருதலானார்கள். ஆனால் இப்போது அந்த இரண்டு அபிப்பிராயங்களும் சுத்தத் தவறென்று விளங்கத் தொடங்கிவிட்டது. மதவிஷயத்தில் நமக்கும் அவர்களுக்கும் எவ்வளவோ ஒற்றுமை யிருக்கிறதென்பது இரண்டு மதங்களையும் ஆராய்ச்சி செய்தவர்களுக்கு நன்கு விளங்குமென்பதுண்மை. ஆகையால் நாம் இருகட்சியாரும் சகோதரர்கள்போல் ஒற்றுமையாகவே நடந்துகொள்ளவேண்டியது அவசியமாகும். இதுவே நம் தாய் நாட்டுப் பெரியாரின் அபிப்பிராயம். பத்திரிகாசிரியர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### (மானசயோகம்.)

(59-ம் பக்கத் தொடர்ச்சி.)

'இவ்வாறு பலவகை யோகங்களிலே நிலைபெற்று நின்று மனதை அடக்கி, இந்திரியங்களை ஜயித்து, உயிர்ச்சார்பு பொருட்சார்புகளாகிய இருவகைப் பற்றுகளையும் ஒழித்து ஞானமயமாய்ச் சமாதி கூடி நிற்பதே ஞானயோகம்ஆம். இந்த ஞானயோகம் எளிதிற் கைவருவதன்று. முன் சென்ற பல ஜன்மங்களில் செய்த பெரும் புண்ணிய பலத்தினால் சிலருக்குக் கைகூடும். இவர்களுக்குக் கர்மங்கள் கிடையா. மாயா பிரபஞ்சத்தையொழித்து ஞானத்தில் நிலைத்து நிற்பவர்களுக்குக் கன்மங்களில்லை. ஞானத்தை அடையவேண்டுவது அவசியமே. கன்மபந்தம் தொலைந்தாலன்றி ஞானம் பிறவாது. அந்தக் கன்மபந்தத்தைத் தொலைக்கவே கன்மங்கள் விதிக்கப்பட்டன. கன்மம் கன்மத்தாலேயே யழியும். அது அழுக்கை அழுக்கினாற் போக்குவதுபோலாகும். பலவகைச் சரக்குகளைப் பூசிப் புடமிடுவதால் செம்பின் களிம்பு நீங்குவதுபோலவாம். களிம்பு நீங்கினால் அச்செம்பு தங்கமாகும். அதன்பிறகு அதற்குப் புடம் வேண்டுவதில்லை. அதுபோலக் கன்மத்தைக கன்மத்தாலொழித்தால் ஞானம் பிரகாசிக்கும். அதில் நிலைத்து நிற்பவர்கள் கன்மங்கள் செய்யவேண்டுவதில்லை. ஞானத்தைப் பெற்றாலும் பூர்வ வாசனை சிறிதுகாலம் ஒழியாமலிருக்கும். அது மேலிடும்போது பிரபஞ்சம் தோன்றும். அது தோன்றும்

போது அறிவிற்சிறந்த பெரியோர் கன்மத்தைச் செய்வர். இது உலகி லுள்ள மாந்தர்களை நல்வழிப்படுத்தி முத்திநெறிகாட்டவேயாம்.

ஞானம் முயற்சியாலடையப்படும். அம்முயற்சி யாது எனின்? முன் மானசயோகத்திற் கூறியவாறு ஆசைகளை யறுத்தலாம். ஆதலாற்றான்மான சிகயோகம் ஞானயோகத்துக் கடுத்தபடியென்று பெரியோர் கூறுகின்ற னர். ஆதலால் மனதை ஐம்புலன்களின் வழியிற் செலுத்தி விஷயங்களில் அழுந்தாமையே ஆசையறுத்தலாம். ஆசைகள் எல்லாவற்றையும் முற்றத் துறத்தல்வேண்டும். அவ்வாறு துறப்பது கூடாதபோது ஒவ்வொன்றாய் விடவேண்டும். இதனையே, "யாதனின் யாதனினீங்கியானோதல், அதனி னதனினிலன்" என்று கூறினர் தேவர். எந்தெந்தப் பொருள்களில் ஆசையை ஒழிக்கின்றானோ அவ்வப்பொருள்களாலுண்டாந் துன்பத்தை அவன் அடைவதில்லை. இவ்வாறு புறப்பற்றாகிய பொருள்களைத் துறக்க வே அவனுக்குப் பூலோகத்தில் துன்பம் நீங்குவதன்றி மனம் அலை யாமல் முத்திநெறிப்படுவதாலும் பேரின்பம் உண்டாகும். புறப்பற்றை யொழித்தபின் யான் என்னும் அகப்பற்றை யொழித்தல்வேண்டும். யான் என்பது ஆன்மா தானல்லாத தத்துவக் கூட்டத்தாலாகிய வுடலைத் தானெனமயங்கி யதனிடத்துப் பற்றுவைத்தலும், உயிரைக் காப்பாற்ற வேண்டுமென்றுவரும் பற்றுதலுமாம். இப்பற்றுதலால் உடம்புக்குண்டா குந் துன்பங்களையும் சீவான்மா நுகரவேண்டிவரும். இப்பற்று ஒழியா தார்க்குத் துன்பமொழிவதில்லை. ஆதலால் புறப்பற்று அகப்பற்றுகளா கிய இரண்டனையுமே விடவேண்டும். புறப்பற்றுக்களை முயற்சியால் ஒழித்தல் கூடுமாயினும் அகப்பற்று விடுவது கடினம். இவ்வகப்பற்று புறப்பற்றுக்களை உயிர்ச்சார்பு பொருட்சார்பு என்றும், யான் எனது என்றும் விவகரிக்கப்படும். அகப்பற்றை அகங்காரம் என்றும், புறப் பற்றை மமகாரம் என்றும் வடமொழி நூல்கள் கூறும். இவ்விரு வகைப் பற்றுகளையும் முற்றுந் துறப்பதே வீட்டு நெறியாம்.

இந்திரிய ஜயமே புறப்பற்றை யொழிப்பதற்குக் காரணமாகும். அகப் பற்று கொஞ்சத்தில் ஒழியாது. சாஸ்திரப் பயிற்சியானும், குருவருளிய உபதேச மொழியானும் யான் உடல் அல்லவென்கிற திடச்சித்தி வரவேண்டும். அது திடப்பட்டபின் யோகப்பயிற்சியால் சுயானுபவமா கக் கண்டு தெளியவேண்டும். ஜோதிஷம், வைத்தியம், மந்திரம், யோகம் என்கிற இந்த நான்கு சாஸ்திரங்களும் பிரத்தியட்சப் பிரமாண சாஸ்தி ரங்களாம். வாயுவின் முயற்சியால் ஆன்மாவை முறையே மூலாதாரமாதி ஆறுதலங்களினும்வைத்து ஒவ்வொன்றாய்த் தாண்டிச்செல்ல,அவ்வான்மா பரமாகாயத்தையடையும். அந்நிலையில் தான்வேறு உடல்வேறு என்பது ஆன்மாவுக்குப் பிரத்தியட்சத்தில் புலப்படும். அப்பொழுது சிவ சொரூப மாகிய ஞானத்தைப்பற்றி யான்மா நிலைபெறும். அந்நிலை கைவந்தால் யோகமும் அநாவசியமாம். யோகமுங் கன்மமேயாதலால் அதனையும் விட

வேண்டும். விட்டபின் ஞானத்திலேயே நிலைத்துப் பரப்பிரமத்தையே நோக்கியிருக்கவேண்டும். இதனையே,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று தேவர் அருளிசெய்தார். இவ்வாறு சமாதிகூடிப் பிரமத்தைச் சிந்தித்து அதில் இலயித்து நிற்பின் தனக்கு வேறான பொருள்களெல்லாம் நிலையற்றன; பிரமம் ஒன்றே நிலையான பொருள் என்கிற அறிவு உதிக்கும். சிற்சட பிரபஞ்சத்துக்கு ஆதாரமாய் நிற்பது அந்தப் பரமே யென்பது விளங்கும்.

இவ்வாறு முறையாகத் துறந்து ஞானத்தில் நிலைபெறினும் அநாதியாகவே ஆன்மாவை விட்டு நீங்காமல் உடன் நின்ற வாசனையாகிய அவா (ஆசை) நீங்குவது அருமை. சமாதி கலைந்தால் அவ்வாசை மேலிட்டு மீண்டும் ஆன்மாவைப் பந்தத்துக்குள்ளாக்கும். ஆதலால் சமாதி கலைந்த காலத்தில் மனதைப் புலன்வழியில் விடாமல் அடக்கியாளவேண்டும். நெடுங்காலத்துப் பழக்கம் பொல்லாது. ஆசைகொள்ளுதலே அநாதிப் பழக்கம். அநாதிக்குக் காலவரையறையில்லை. எல்லையற்ற காலப்பழக்கம் எல்லாவற்றினும் கொடிதும் வலிமையுடையதுமாம். அதனால் அதனை வெல்வதரிது. இச்சமையத்தில் சாஸ்திர ஆராய்ச்சி, தெய்வத்தியானம் முதலியவற்றில் மனதைச் செலுத்தி யடக்கவேண்டும். இதுபற்றியே தேவர்,

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு"

என்று கூறியருளினர். ஐம்புலன் வழி நடக்கும் மனதை யடக்கிக்கொண்டாலும் மெய்மையை அறியாதார்க்கு அது பயன்தருவதில்லையாம் என்பது கருத்து. மெய்மையாவது அநாதி முத்தசத்துசித்தானந்த நித்திய சொரூபம். அதுவே பிரமம் சிவம் என்ற பரியாய நாமங்களானுங் கூறப்படும். மெய்மை என்பதனைத்தான் வடமொழி நூல்கள் "சத்து" என்று கூறும். அதனை யுணர்தலாவது, எல்லாப் பொருள்களிலும் பிரமத்தைக் காணுதல். இதனையே,

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

எனத் தேவர் விளக்கி யருளினர். எவ்வாறு விளக்கினர் எனின், சரம் அசரமாகிய சகல பொருள்களு மாயா காரியமாகிய தத்துவக்கூட்டத்தாலாயவையேயாம். காரியமெல்லாம் அழியுந்தன்மை யுடையன. நிலையற்றனவாம் என்பது சாஸ்திர வாராய்ச்சியா னெய்தப்படும். இந்தச் சாத்திர வாராய்ச்சியால், நிலமுதல் உயிரிறுதியாயுள்ளனவெல்லாந் தத்துவக் கூட்டமாமென்றறிந்து அவற்றைத் தத்தங் காரணங்களில் ஒடுக்கி யுணரவேண்டும். தத்துவக் கூட்டங்களெல்லாவற்றையும் தத்தம் காரணங்களில் முறையே ஒடுக்கிச் சென்றால், கடைசியில் காரணகாரியங்களிரண்டுமின்றி

நிற்பது எதுவோ அதுவே மெய்ப்பொருளாம். அதுவே ஜீவான்மா அடைய வேண்டிய பரம்பொருளாம். இவ்வாறு காணப்படும் பொருள்களெல்லாம் தத்துவக்கூட்டமேயாதலால் அவை யெல்லாவற்றையும் சோதித்து அறிந்து அவற்றின்கண் விஞ்சி நின்ற காரணப்பொருளைக் காண அவை யெல்லாம் பரப்பிரமமாகவே தோன்றும். தோன்றவே எல்லாம் பிரமமய மாகவே யிருக்கும். எல்லாவற்றையும் பிரமமாய்க் காணுங்கால் மாயை விலகும். மாயை ஒழியவே அது காரணமாயீட்டப்படும் கன்மக் குவியல் எரிந்துபோகும். கன்மந்தொலைந்தால் அஞ்ஞானமாகிய அவித்தையாவிருள் தனக்குத்தானே கழிந்துவிடும். அவ்விருள் நீங்கினால் பரப்பிரமத்தின் இயற்கைச் சொரூபம் அனந்தகோடிச் சூரியபிரகாசம்போலப் பிரகாசிக்கும். அந்தப் பிரகாசத்தின் முன் பிறப்புக்குக் காரணமாகிய பிரபஞ்சமே தோன்றாது. பிரபஞ்சம் தோன்றாமையால் எல்லாப்பொருளும் எவ்விடமும் பிரமசொரூபமாகவே தோன்றும். இந்தக் காட்சியைக் காண்பதே முத்தியுமாம். இதைத் தரிசித்த ஆன்மா மீண்டும் பிரபஞ்சத்திற் புகாது. இது இராப்பகலற்ற விடமாம். இதுவே நினைப்பு மறப்பற்றதும், பிறப்பிறப்பற்றதுமான விடமாம். இந்த நெறியை யடைந்தவரே ஜீவன் முத்தராவார். இந்நெறியை உணர்தற்குப் பல வுபாயங்களுள. இதனையே தேவர்,

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன்
நாமங் கெடக்கெடு நோய்" எனக் கூறியருளினர்.

மேற்கூறிய வுபாயங்களுள் இதுவுமோருபாயமாம். (தொடரும்.)

**சிவானந்தசாகர யோகீஸ்வரர்.**

---

## சமீபத்தில் நேர்ந்த பெரு வெள்ளம்.

### தண்ணீர்!

தண்ணீர்! ஆம், அதுதான் உமது பெயர்! குளிர்ச்சியுள்ள நீர் அல்லவா? மிகப் பொருத்தமானதே! நீர் உலகத்திலும், மக்கள் உருவிலும் ஒருவகையில் எங்கும் நிறைந்திருக்கிறீர். அதோடு, 'நீரின்றி உலகமில்லை' யென்பதனால் இவ்வுலகுக்கு நீர் இன்றியமையாதவரா யிருக்கிறீர். என்றாலும், இப்பொழுது உமது பெயரை மிகப் பயங்கரமான நிலைமையிற் கூறவேண்டி யிருக்கிறது. காரணம் நீர் அளவுக்கு மீறியதும், வரம்பு கடந்ததுமேயாகும்.

உள்ளபடியே உமது குடும்பம் மிகுந்தவன்மையுடையது. மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய நீங்களனைவரும் உடன்பிறந்தோராவீர். உங்களில் ஒவ்வொருவரும் அதிசயிக்கத்தக்க திறமையுடையவர்களே! என்றாலும், மக்களுக்குப் பெரிதும் பயன்கொடுக்கும் நீர், உமது உறைவிடமாகிய பெருங் கடலினின்று 'மேகம்' என்னும் வாகனமேறி மேற்றிசையில் எக்காரணத்தைக்கொண்டோ ஓர்வகை வீராவேசத்துடன் இறங்கி

னீர். 7 நாட்களில் 60 அங்குலம்வரை நீர் பெருகியதாகக் கணக்கும் எடுக்கப்பட்டது. உடனே மறுபடி உமது பிறப்பிடத்திற்குச் செல்ல வெண்ணிப் புறப்பட்டீர். வழியிலுள்ள மைசூர், கள்ளிக்கோட்டை, உப்பினங்குடி, எர்ணுகுளம், பாலக்காடு, பெங்களூர், ஒன்னப்பூர், சிவசமுத்திரம், சோரனூர், ஈரோடு, பவானி முதலிய பல ஊர்களையும், கிருஷ்ணு சாகர அணை, கண்ணம்பாடி அணை முதலிய அணைகளையும், பல நதிகளின் பாலங்களையும் துன்பஞ்செய்துகொண்டு வந்ததாகத் தெரியவந்தது.

அவ்வழியாகவே திருச்சிராப்பள்ளியை யடைந்தீர். கனவிலும் நினைத்திராத பல அற்புதங்களைச் செய்தீர். நெஞ்சு திடுக்கிடத்தக்க உமது அநீதியைக் கண்ட மக்களிற் பலர் ஆச்சரியமும் துன்பமும் அடுத்தடுத்து மேலிட அவதிப்பட்டனர். ஒரு ஏழையின் குடிசை இடிந்து விழும்பொழுது ஒரு சிறு குழந்தை அப்பா! எனக் கதறிற்று. அவ்வோசை பயத்தால் தன் தகப்பனைக் கூப்பிடுவதேயாயினும், இத்தகைய அநீதியைச் செய்வது அப்பா! (தண்ணீரா?) வென வினவியது போன்றிருந்தது. ஒவ்வோர் காலங்களில் உங்களில் ஒவ்வொருவருக்கும் இத்தகைய உருத்திராவேசம் தோன்றிப் பலரை வருத்துவதினுலேயே, அறிவிற்சிறந்த முன்னேர்கள் உங்கட்கு 'பூதங்கள்' எனப் பெயர் கொடுத்தனர்போலும்! ஆகவே, சமீபத்தில் நிகழ்ந்த உமது பூதச் செய்கையைப் பின்வருமாறு கூறுகிறேன்.

1. சத்ரேறக்குறைய 12 மைல் சுற்றளவிற்கு 2 அடிமுதல் 17 அடி உயரம் வரை நிறைந்து ஓடிக்கொண்டிருந்தாய்.

2. இந்தப் பிரதேசத்தின் எல்லைக்குட்பட்ட சுமார் 30 மைல் நீளத்திற்கு இருகரைகளிலுமுள்ள பல கிராமங்களை உருவில்லாது செய்தாய்!

3. முக்கிய பாட்டையை (Main Road) மனிதர்கள் நடக்கமுடியாதபடி வழிமறித்து 5 அடி உயரம் வளர்ந்து சென்றுகொண்டிருந்தாய்!

4. கூரைவீடுகள், ஓட்டுவீடுகள், மெத்தைவீடுகள் பல இருந்தவிடந்தெரியாமல் தரைமட்டமாக்கிஞய்!

5. தந்திமரங்களிற் பலவற்றைப் புரட்டிக்கொண்டுபோய்த் தந்திப் போக்குவரத்துக்களைத் தடைப்படுத்தி மகிழ்ந்தாய்!

6. முருங்கப்பேட்டையிலுள்ள நதிக்கரையை 1000 அடிக் கதிகமாக உடைத்துக் கிராமத்தைப் பூராவும் அழித்தாய்!

7. இருப்புப்பாதையை 15 மைலுக்கதிகமாக உடைத்துப் புகைவண்டிப் பிரயாணத்தை நிறுத்திவிட்டாய்!

8. சிந்தாமணியிலுள்ள நகரபாதுகாவலர்களின் விடுதி வரிசைகளைக் குட்டிச்சுவர்களாக மாற்றிவிட்டாய்.

9. தபால் கட்டிடங்கள், நீதிமன்றங்கள் முதலியவைகளை மூடச்செய்து அதிகாரிகளை உனக்கு உபசாரம் செய்யும்படி செய்தாய்!

10. கோட்டையில் புகைவண்டி தங்குமிடத்திற்குச் செல்லும் பாதை முழுதும் 5 அடி உயரத்திற்கு அதிகமாக ஏறினை.

11. வடகிழக்கு, வடக்கு, வடமேற்கு, மேற்கு ஆகிய நான்கு திக்குகளையும் சூழ்ந்து மக்களின் பிரயாணத்தைத் தடுத்தாய்!

12. 36 கண்கள் உடையதும், மிக்க அகலம்வாய்ந்ததுமான கொள்ளிடப்பாலத்தைக் கொண்டுபோய்விட்டாய்!

13. பாலத்தின்மீது நாள்தோறும் செல்லும் ஐந்நூற்றுக்கதிகமான தானியவண்டிகளை வராதபடிச் செய்து, வியாபாரிகளைத் தூங்கவைத்தாய்!

14. இலாடம் கட்டுபவர், கொல்லப்பட்டரைக்காரர், கைவண்டிக்காரர் முதலிய பலரின் பிழைப்புகளைக் கெடுத்தாய்!

15 நதிக்கு வடபுறத்தில், 50 படி உப்பு ரூ. 11—4—0 வீதமும், 24 புட்டி கொண்ட மண் எண்ணெய் ரூ. 12—0—0 வீதமும் விற்கவைத்தாய்!

16. உயர்தரக் கலாசாலைகள், கல்லூரிகள் பல மூடப்பட்டு நீண்ட நாள்களாக நீயே யவற்றில் நிறைந்து வாசம் செய்தாய்!

17. சிறந்த நெல் வயல்களில் சற்றேறக்குறைய 5000 காணிகள் வரை மணல் மலைகளாக உயரவைத்தாய்!

18. சிவபிரான் திருமுடியின்மீது நீர் இருப்பதை நம்பாத மனிதர்கட்கு திருவானைக்காவல் சம்புநாதர் கோவிலில் அதை மெய்ப்பித்தாய்!

19. நகரத்தின் பல பாகங்களுக்கும் உம்மை யனுப்பும் யந்திரத்தைத் தாக்கிப் பல பெருங் குழாய்களை முறித்தெறிந்துவிட்டாய்.

முடிவாகக் கூறுமிடத்து எதிர்பாராததும், மிகப் பயங்கரத்திற்குரியதுமாகிய உமது செய்கையைக் கண்ட பலர், திருச்சிராப்பள்ளி இனித் தரித்திராப்பள்ளியாக மறைந்துவிடுமெனக் கருதி நடு நடுங்கினார்கள். ஆம், கள்ளன் புகுந்தால் கதவு நிலையாகிலும் மீதியாகும்; உமது சகோதரன் (நெருப்பு) புகுந்து அதையும் அழித்தாலும் குட்டிச் சுவரேனும் மீதியாகும்; நீர் புகுந்து சென்றாலோ தரைமட்டமே மீதியாகும்? ஆனால், மக்கள் எண்ணியதுபோல தரித்திராப்பள்ளியாகச் செய்யாவிடினும், நகரத்தின் வடபுறத்திற் பலபாகங்களைப் பார்க்கப் பரிதாபமான பாலைவனங்களாக மாற்றித் தரித்திராப்பள்ளியாக்கிவிட்டாய்.

அந்தோ! குழாய்களின் வழியே நீர்வராமல், நகரத்தின் தென்புறத்திலுள்ள மக்களைக் குளங்களிலும் கிணறுகளிலுமிருக்கும் அசுத்தநீரைக்குடிக்கச்செய்தீர். பாவம்! அதனால் திருச்சிராப்பள்ளி உமக்குக் கர்ப்பந்தரித்து அன்றிரவே 'விஷபேதி' யென்னும் ஒரு சிறந்த குழந்தையைப் பெற்றது. தண்ணீர்ப்பூதமாகிய உனக்குப் பிறந்த இக் கொடியபூதத்தை நகரமுழுதும் சங்காரத்தொழில் நடத்தச்செய்தாய். உனது வரம்புகடந்த குறும்

புத்தனத்தையறிந்த நகரபரிபாலன சபைத் தலைவர், உம்மைக் கண்டிக்க வாரம்பித்ததும், பின்னும் அதிக கோபம் பிறந்ததுபோலும்! திருவரங்கம், திருவானைக்காவல் முதலிய விடங்களைத் தவிர்த்து, இச்சிறிய நகரத்தின் எல்லைக்குள்மட்டும் உமது அருமைக் குழந்தையாகிய 'விஷபேதி' பூதத்தால் ஜூலை மாதம் 23-ந் தேதி முதல் ஆகஸ்டு மாதம் 6-ந் தேதி வரை இரண்டு வாரங்களில் 1007 பேர் மடிந்தார்கள். வேறுவிதமாய்ச் சொல்லின், 12 மணிநேரங்கொண்ட பகலில் ஒவ்வொரு நிமிடத்திற்தும் ஒரு பிரேதம் மயானத்திற்குப் போய்க்கொண்டேயிருந்தது.

திடுக்கிடத்தகுந்த இக்காட்சியைக்கண்ட தெய்வபக்தி நிறைந்த பல சமயிகளும் கூட்டங்கூட்டமாகத் தெருத்தெருவாய் இறைவனைத் தொழுதுகொண்டே சென்றார்கள். அக் கூட்டங்களிற்கூட உமது துட்டிப்பூதம் சிறிது எட்டிப்பார்க்க வாரம்பித்தது மிகவும் அதிசயிக்கத்தக்கது. இவ்வகையால் மரணத்தையும் அதிகமாக்கி மயானத்தையும் 3 மைல் சுற்றளவுக்குச் சூழ்ந்துகொண்ட வல்லமை பின்னும் வயிற்றெரிச்சலோடு புகழத்தக்கதேயாகும். வடக்கேசெல்லும் பிரேதங்களைத் தெற்கே போகச் செய்தும், வண்டிகள் போகும் பாதையில் பிரேதங்களை எரிக்கச்செய்தும் காலத்தைத் தலைகீழாக்கினாய் !

ஓ! தண்ணீரே ! உம்மால் ஏற்பட்ட இவ்வூரின் பரிதாப நிலைமையைப் பற்றி இன்னும் வரைவதானால், அது ஓர் தனிப்புத்தகமாக முடியும். மேலும், ஆனந்தனைப்பெற்று ஆனந்தமடைகிற நண்பர்களின் மனதை வருந்தச்செய்ய எமக்கு விருப்பமில்லை; முடிவாக உம்மை எக்காரணத்தைக்கொண்டு இவ்வனீதிகளைச் செய்தீர் ? என்பதைமட்டுமே வினவுகிறேன். 'அவனன்றி ஓரணுவுமசையாது' எனினும் 'யாவும் இறைவனது திருவருளேயாகு' மெனினும், பார்க்கச் சகியாத பல பரிதாபமான கண்காட்சிகளை நோக்குமிடத்து, இக் கொடுஞ்செயல்களைச்செய்ய கருணையே உருவாகவுடைய பரம்பொருள் உமக்குக் கட்டளையிட நியாயமில்லையே! யெனத் தோன்றுகிறது. ஆகவே, இவை மனித அறிவுக்கு மீறிய, மக்களால் அறிந்துகொள்ளமுடியாத ஒரு தேவநியாயம் போலும் !

ஆனால், எமது குறைந்த அறிவுக்கெட்டியவரையில் இது 'நிலையாமை' யை அறிவுறுத்துவதற்காக நடத்திய நாடகமாகவே தோன்றுகிறது! நிலையாமையைப்பற்றிப் புத்தகங்களிற் கதையைப்போல் மேற்போக்காக வாசித்தவைகளையெல்லாம் கண்ணுக்கெதிரே உண்மையாகவே நடத்திக் காட்டினாய் !

போதாக்குறைக்குச் சுறுசுறுப்பில் முதன்மைபெற்ற உமது புத்திசாலிக் குழந்தையைக்கொண்டு

"நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு" என்பதும்,
"நேற்றிருந்தா ரின்றுவெந்து நீரானார்" என்பதும்,

4

மிக விரிவானது என்றெண்ணி, "காலையில் நன்றிருந்தார், கடும்பகலில் நொந்திறந்தார், மாலையிலோ வெந்தொழிந்தார்" எனக் கூறச்செய்தாய்! அதோடு, சிலமணி நேரங்களிற் பிறந்து, வளர்ந்து, அழியும் புழுக்களைப் போன்று மக்களின் உடம்புகளை நடத்திக்காட்டினுய்! அந்தோ! 'ஒரு பெண் தான் சமைத்துண்ணவெண்ணிச் சேகரித்த விரட்டிகள் அப் பெண்ணை யெரிக்க உதவியது, என்று எம்மைக் கூறவைத்தாய்! ஆகவே, பலவகையானும் உலகம் நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை யென்பவைகளைத் தெளிவாக அறிவித்தாய். ஆ! உமது சரித்திரத்தை நேரிற் காண்பவர்களும், பத்திரிகைகளின் வாயிலாய் படித்தறிகிறவர்களும் ஆழ்ந்து நோக்கும் அறிவை யுடையவர்களாயிருப்பின் அவர்களை உடனே அடைதற்கரிய பெரும்பேற்றை யடையச்செய்வாய். எவ்விதமெனின் உமது சரித்திரம்,

"தோன்றும் பொருள்கள் யாவும் அழியுந் தன்மையுடையது. ஒவ்வொரு விஞடியும் மரணம் நெருங்குகிறது. சத்தியம் தவராதே, பிறர்க்கின்ஞசெய்யாதே, இறைவனைத் தொழு. இவ்வுலகுக்கு நீ வந்தவேலையென்ன வென்பதைச் சிந்தித்துப்பார்" என்று கூறுவதுபோன்றிருக்கிறது.

ஓ! தண்ணீரே! ஆரம்பத்தில் உமது செய்கைகளின் வெளித்தோற்றத்தைக்கண்டு மிகவும் வருந்தினேம் எனினும், நிலையாமையை அறிவுறுத்தியதற்காக நாம் உமக்கு நன்றி செலுத்துகிறேம்.

எத்தகைய இடையூறுகள் நேரினும், சத்தியம், நீதி, ஜீவகாருண்யம் முதலிய சற்குணங்கள் பொருந்தி கருஞநிதியாகிய சச்சிதானந்தப் பரம்பொருளினிடத்தில் பூரண நம்பிக்கைகொண்டொழுகும் அவன் அடியார்களுக்கு ஒரு குறையேனும் துன்பமேனும் சம்பவியாதென்பது உண்மை.

எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்பதோடு இவ்வியாசத்தை முடிக்கிறேம்.

கி. ஆ. பெ. விஸ்வநாதபிள்ளை, திருச்சிராப்பள்ளி.

குறிப்பு :—தண்ணீர் கூறும் விடை.

ஐயா பிள்ளையவர்களே!

நான் அனேகம் கெட்டகாரியங்களைச் செய்துவிட்டதாக என்மேல் பல குற்றங்களைச் சுமத்துகிறீர். ஆயினும் "எக்காரணத்தைக்கொண்டு இவ்வநீதிகளைச் செய்தீர்? என்பதைமட்டுமே வினவுகிறேன்" என்று கூறினீர். தாங்கள் இவ்வளவு கஷ்டம் எடுத்துக்கொண்டு என்னை அவதூறு செய்தபோதிலும் நான் உமக்கு விடை யளிக்கவேண்டியவஞகவிருக்கிறேன். நீர் அவ்வாறு கேட்டுவிட்டு அடுத்த வாக்கியத்தில் "அவனன்றி யோரணுவுமசையாது என்றாலும் கருஞநிதியாகிய அப்பகவான் மனஞ்சகியாத இத்தகைய அநீதிகளைச் செய்யுமாறு உனக்குக் கட்டளையிட்டிருக்க மாட்டார்" என்று பொருள்படக்கூறினீர்.

ஐயா பிள்ளையவர்களே !

காரணமின்றி காரியம் நிகழ்வது எங்கேனுமுண்டோ? இல்லை. "அவனன்றி அணுவுமசையாது" என்பதேயுண்மை. ஆனால் அவன் ஆன்மாக்களின் நன்மையைக்கருதியே கருணையோடுதான் எதையும் செய்கிறான். அவன் கருணை அறக்கருணை, மறக்கருணை என்ற இருவிதங்களாக விருக்கின்றன. அன்பர்களுக்கு இனியவைகளையே செய்து அவர்களை ஈடேற்றிவைத்தல் அறக்கருணையாகும். அக்கிரமஸ்தர்களைத் (தந்தை தன் புத்திரனது குற்றத்திற்காகத் தண்டித்து நல்வழியில் திருப்புவதுபோல்) தண்டித்து அவர்கள் நேர்வழியில் திரும்பச்செய்தல் மறக்கருணையாகும். இதனால் ஆண்டவன்மேல் ஒரு குற்றமுமில்லை. வானத்தில் சூரியன் ஒரே நிலையாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கப் பூமியிலுள்ள வஸ்துக்கள் அதனதன் நிலைமைக்குத் தக்கபடி வெவ்வேறு மாறுதல்களை யடைகின்றன. தடாகத்திலுள்ள தாமரை மலர்கிறது. தரையிலுள்ள தாமரை உலர்ந்தழிகிறது. இதுபோலவே, நன்மை தீமைகளாகிய யாவும் ஜீவன்களின் வினைப்பயன்படி நடக்கின்றன.

ஐயா என்னாலாவது ஒன்றுமில்லை. தாங்கள் என் வல்லமையையும் என் சகோதரர் வல்லமையையும் எவ்வளவு அதிகமென்று கூறினும், பஞ்சபூதங்களென்று எங்களுக்குப் பெயர் இருப்பினும், கடைசியில் நாங்கள் அசத்தென்றும் ஜடமென்றுமே தீர்மானிக்கப்பட்டிருக்கிறோம். ஆதலின் என்னால் ஒன்றும் செய்யமுடியாது. "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்று அப்பர் மூர்த்தி அருளியபடி யாவும் ஈசன் செயலே. மனிதராகிய உங்களில் அக்கிரமமும் அநீதமும் அதிகரித்ததால் இவ்வாறு நடந்தது. இதுதான் காரணம். அப்படி நாங்கள் என்ன அக்கிரமம் செய்கிறோம் என்று கேட்கிறீரோ, உங்கள் அக்கிரமத்தில் சிலவற்றைமட்டும் கூறி என் விடையை முடிக்கிறேன்.

1. துரோகத்தில் குலத்துரோகம், பிதுர்த்துரோகம், தேசத்துரோகம், மதத்துரோகம், தெய்வத்துரோகம், இராஜத்துரோகம் என்ற துரோகங்கள் மிக்க பாபமானவையென்று கூறப்பட்டிருக்கிறது. இவற்றில் இராஜத்துரோகம் தவிர மற்றத் துரோகங்களைச் செய்வோர் உங்களில் மலிந்துவிட்டார்கள்.

2. உங்கள் முன்னோர்களின் ஆசாரங்களை யலட்சியம் செய்யத் தலைப்பட்டுவிட்டீர்கள். உங்கள் குலாசார ஒழுக்கமும் தருமமும் அதிகமாய்க் குன்றத் தொடங்கிவிட்டன. ஐயா ! சென்னையிலுள்ள 'காபீ கிளப்' என்ற பலகாரக் கடைகளுக்குள் சென்று பாரும். பிராம்மணர்கள் காற்சட்டை, மேற்சட்டை, பூட்ஸ், தலைப்பாகை யணிந்தபடி, தங்களிலும் தாழ்ந்த வருணத்தார் பக்கலிலேயே யுட்கார்ந்துகொண்டு பலபேர் உண்ட பீங்கான்தட்டில் பலகாரங்களை வைத்துக்கொண்டு கரண்டியால் அள்ளிப் பொசிப்பதைச் சர்வ சாதாரணமாய்க் காணலாம். இத்தகையோர் உபாத்

தியாயர்களாகவும் இருக்கிறார்கள். அவர்களிடம் வாசிக்கும் மாணவர்கள் எக்கதியாவார்களோ கடவுளுக்கே பிரீதி. இத்தகைய பல தகாத நடக்கைகளாலும் பிராம்மணனுக்குரிய கடமைகளை யலட்சியம் செய்வதாலும் மற்ற வருணத்தார் பொதுவாய்ப் பிரம்மகுலத்தையே அலட்சியமாய்த் தூஷிக்க இடந்தந்து, அவர்கள் பாபமூட்டை கட்டிக்கொள்ளவும் செய்கிறார்கள். முதல்வருணமே இவ்வாறாயின் மற்றையரைப்பற்றி கூறுவது அனாவசியம்.

3. மனச்சாட்சிக்கும் கடவுளுக்கும் ஒவ்வாதவழியில் பொருளைச் சம்பாதிப்பதையும், பிரியமான தகாத போகங்களை அனுபவிப்பதையுமே இச் சென்மத்தில் செய்யவேண்டிய காரியங்களாகக் கொண்டு, ஈசுர சிந்தனையேயின்றி யிருப்போர் அதிகமாய் பெருகுகின்றனர்.

4. பொறாமைக்குணமும், எனக்கு இரண்டு கண்களும் கெட்டாலும் பரவாயில்லை என் அண்டை வீட்டுக்காரனுக்கு ஒரு கண் கெட்டால் சந்தோஷம் என்று பிரார்த்தனை செய்யும் குணமுமுடைய புண்ணியர் மலிந்துவிட்டனர்.

5. தேசாபிமானம் மதாபிமானம் அதிகமாய்க் குறைந்துவிட்டன. ஒற்றுமையென்பது முற்றுமேயில்லை. அவற்றிற்கு மாறாக அற்பமான சுயநலத்திற்கு ஆசைப்பட்டு, தங்கள் இலாபத்திற்காக நீங்கள் மேலோங்கலாகாதென்று கருதுவோர் பட்சத்தில் சேர்ந்துகொண்டு, தாய் நாட்டிற்கே தீங்கிழைக்கும் கோடரிக் காம்புகள் உங்களில் அனேகமாயிருக்கின்றன.

6. உங்கள் சந்ததியாரையும், முன்னோராகிய ஆன்றோரின் ஆசாரங்களை யலட்சியம் செய்து அன்னிய நாட்டாரது அநாசாரங்களில் பழக்கிக் கெடுக்கிறீர்கள். அவர்களுக்கு மதக்கல்வியே யளிக்காமல் அவர்களுடைய ஆன்மார்த்தத்தையும் கெடுக்கிறீர்கள்.

7. ஒற்றுமையாயிருப்பதற்குப் பதில், எதிரி யுங்களைச் சுலபமாயழிக்கச்செய்கின்ற சூழ்ச்சிக்கு உதவிசெய்ய, உங்களுக்குள் அநாவசியமான கட்சிபேதங்களை யுண்டாக்கிக் கொள்கிறீர்கள். என் ஜாதி பெரிது உன் ஜாதி தாழ்ந்தது என்று ஜாதிப்பிரிவினையை யதிகமாக்கி விரோதத்தை வளர்த்துக் கொள்ளுகிறீர்கள்.

8. அடிமைத்தொழிலில் ஆசையும் சுயாதீனத்தொழில்களில் அலட்சியமும் கொண்டு தலைகீழாய் நடக்கிறீர்கள்.

9. வர்த்தகத்திலோ சூது, மோசம், ஒழுங்கின்மை அதிகமாகிவிட்டன. பாலில் நீரும், அரிசியில் கல்லும், சர்க்கரையில் மணலும், நெய்யில் கொழுப்பும், இவ்வாறு ஒவ்வொரு பொருளிலும் ஆபாசமான வேறு பொருள்களைச் சேர்ந்து ஜனங்களை யேமாற்றுவது அதிகமாய்விட்டது.

10. ஒவ்வொருவரும் சுயநல நோக்கமுடையவர்களாய் நடந்துகொண்டு தாய் நாடு முன்னேற்ற மடையவொட்டாது செய்வதால் பாரத மாதாவிற்கு வயிற்றெரிச்சலை யுண்டாக்குகிறீர்கள்.

இவற்றினும் இன்னும் அதிகமாய் நீங்கள் செய்யவேண்டிய அக்கிரமங்கள் எவையிருக்கின்றன. இன்னும் விரித்துக்கூறின் ஆனந்தன் இடந்தரமயங்குவான். ஆகையால் இப்போதேனும் ஆண்டவன் தன்டனையை யுணர்ந்து இனியேனும் சரியான மார்க்கத்தில் நடக்குமாறு உங்களுக்கு எச்சரிக்கை செய்வதோடு என் விடையை முடித்து விடுகிறேன்.

தண்ணீர்.

---

## பகவத்கீதை வசனம்.

(76-ம் பக்கத் தொடர்ச்சி.)

என் நண்பனுன பார்த்தா! இந்த ஜீவரூபமான க்ஷேத்திரக்ஞன் என்னும் புருடன் இத்தேகத்திலிருப்பினும் இவன் சர்வத்திலும் வேறானவன். ஆதலின் இவனே (சுகதுக்காதிகளனைத்தையும் புஜிக்கும்) போக்தாவும், (தேகேந்திரியாதிகளனைத்தையும் அறிவு சொரூபமாகவிருந்து பார்க்கின்ற) உபதிருஷ்டாவும், எப்பொருட்கும் அது அதுவாய் ஒத்திருக்கும் நாதனும் மகேசுரனும் பரமாத்மாவுமாக விளங்குகிறான்.

(பகவான் பிரகிருதி புருஷ விவேகமுடைய ஞானியின் பெருமையை யருளிச்செய்கிறார்.)

ஹே அர்ச்சுன! மேலே கூறியபடி க்ஷேத்ரக்ஞனாகிய புருடனையும், சுக துக்காதி குணங்களையுடைய அவித்தியாவடிவப் பிரகிருதியையும் உள்ளபடி எவன் அறிந்தானே அப்புருடன் பிராரப்த கர்மவசத்தால் கிடைத்த போகங்களை எப்படி (சாத்திரவிதியைக் கவனியாமல்) புஜித்துக்கொண்டு சீவிப்பினும் பிறவியை யடையமாட்டான்.

[இத்தேகம் மித்தையாகிய அநித்திய சடப்பொருளென்றும், இதில் வசிக்கும் சாக்ஷியாகிய ஆன்ம சொரூபமே தானென்றும் குருசாத்திர மூலமாய், அனுபவமாய் எவன் அறிகிறானே அவன் பிறப்பிறப்பற்ற முத்தியில் எய்துவன் என்பதாம். அத்தகைய புருடன் பிராரப்த கர்ம பலனாகிய போகங்களை யனுபவித்துக்கொண்டிருப்பவனாகக் காணப்படினும், அவன் தான் ஒன்றைச் செய்கிறவன் அல்லது செய்விக்கிறவன், ஒன்றைப் புஜிக்கிறவன் என்ற அபிமானமின்றி சாக்ஷிமாத்திரமாகவே யிருப்பன்.]

(ஆன்மஞானத்தையடையும் அதிகாரிகளின் பேதத்தால் சாதன வகைகளில் வித்தியாசமுண்டென்பதை ஸ்ரீ பகவான் அருளிச்செய்கின்றார்.)

ஏ பார்த்த! சகல தேகங்களிலும், எங்கும் நிறைந்து அகண்ட சொரூபமாக நிற்கும் பரமான்மாவைச் சிலர் தியான ரூபமான ஆன்ம சிந்தனத்தினால் தமது உள்ளத்தின்கண் சாக்ஷாத்கரிப்பர்.

வேறு சிலர் சாங்கிய யோகமார்க்கத்தால் அப்பரமான்ம சொரூபத்தின் சர்வவியாபக நிலைமையைச் சாட்சாத்கரிப்பர்.

இந்த இரண்டு மார்க்கங்களாலும் அந்த ஞானத்தை யடையத்தக்க

அறிவு விளக்கமில்லாதோர் ஆசாரியன் இதுவே தெய்வம் என்று உபதேசித்த ஒன்றையே சிரத்தையோடு தியானம் செய்து, அத்தியானவாயிலாக அவர்களும் பிறவியை யொழித்துக்கொள்வார்கள்.

[இப்போது கூறப்பட்டவற்றில் முதல்மார்க்கத்தால் ஞானத்தையடைவோர் உத்தம அதிகாரிகளாவர். இரண்டாவது மார்க்கத்தை யனுசரிப்போர் மத்திம அதிகாரிகள். மூன்றாவதாகிய கடைசிமார்க்கப்படி ஞானமடைவோர் மந்தர அதிகாரிகளாவர்.]

மற்றபடி சரமும் அசரமுமாகிய தேகங்களைத் தரித்துக்கொண்டிருக்கும் சகல ஜீவர்களும் துக்கத்தை யனுபவிப்பதன் காரணம் என்னவெனில், அவர்கள் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞன் (பிரகிருதி புருஷன்) ஆகிய இரண்டின் தன்மையை விசாரித்தறியாத குற்றமேயாகும்.

(இங்கு பகவான் "சரமும் அசரமுமாகி தேகங்களைத் தரித்துக்கொண்டிருக்கும் சகல ஜீவர்களும்" என்றருளியதில் ஆன்மாவின் வியாபக இலக்ஷணம் அடங்கியுள்ளது. இதனால் தாவரஜங்கமமாகிய இரண்டு உருவங்களிலும் ஆன்மா உள்ளது என்று அறியக்கிடக்கிறது. ஆனால் கல்லிலும், மரத்திலும், மிருகபட்சிகளிலும், மனிதனிலும் உள்ள ஆன்மா ஒரேவிதமாயினும் அறிவு விர்த்தியில் தாரதம்மியமுண்டு. அவஸ்தாபேதம் என்றும் கூறலாம். மனிதனிடத்திலேயே அவஸ்தாபேதத்தால் அறிவு விர்த்தியில் தாரதம்மியம் காணக் கிடக்கிறது. சாக்கிரத்திலுள்ள மனிதனுக்குப் பூரண அறிவிருக்கிறது. சொப்பனத்தில் அறிவு விளக்கம் குறைவே. சுழுப்தியில் அறிவுசாக்ஷிமாத்திரமாக விருக்கிறதேயன்றி அதன் விர்த்தி பூரணமாய் ஒடுங்கியிருக்கிறது. இவ்வாறே மற்றப் பிராணிகளில் ஓரறிவுமுதல் ஐந்து அறிவுவரையுளது. தாவரங்களுக்கு ஸ்பரிச உணர்ச்சி ஒன்றேயுண்டு. கல் முதலியவற்றில் ஆன்ம நிலை சுழுத்தியின் நிலைமையிலிருக்கிறது. தாவரங்களின் இலை காய் கனி முதலியவற்றைப் பற்றி நமது உரோமம், நகம் இவற்றைக் கழிப்பதுபோல் அவற்றிற்கு இம்சையை யுண்டாக்குவதில்லை யென்றும், ஆகையால் இலை, காய், கனி முதலியவற்றை யுண்பதில் ஜீவ இம்சை யில்லையென்றும் மற்ற ஈரறிவுமுதல் உடைய பிராணிகளை வதைத்தல் கொலைபாதகமாகும் என்றும் தெள்ளிதின் விளங்கும்.]

ஏ பார்த்த :—நாசத்தையுடைய பூதங்கள்தோறும், நாசமற்றதாய் நிர்விகாரரூபமாய்க் கலந்துள்ள வேதப்பொருளான பரமான்மாவை சர்வ பூதங்களிலும் ஏகரூபமாய்ச் சாக்ஷாத்கரிக்கிறவன் எவனோ அவன் மங்களமான வினைத்தும் கண்டவனாவன்.

ஸ்தாவர ஜங்கம ரூபமாகிய சகல வஸ்துக்களிலும் நிறைந்திருப்பதாகிய ஆன்மசொரூபத்தை அத்தன்மையாகவே சாக்ஷாத்கரிக்கும் அறிஞனே பிறப்பிறப்பாகிய துக்கத்தை'யொழித்து நித்தியானந்தமாகிய மோக்ஷ நிலையையடைகின்றான்.

(இவ்வாறு ஆன்ம சொரூபத்தைச் சாக்ஷாத்காரமாக அறிந்தவனே முத்தியெய்துவான் என்றருளிய ஸ்ரீ பகவானை நோக்கி அர்ச்சுனன் வினவுகிறான்.)

அர்ச்சுனன் :—"பரந்தாமனே! சுகாசுக கர்மங்களை யுண்டாக்குகிறவனும், தேகங்கள்தோறும் வேறுவேறாய் இருந்து சுகதுக்கரூபமான பலன்களைப் புஜிக்கிறவனுமாகிய ஆன்மாவைச் சர்வ பூதங்களிலும் ஏகமாய்க் காண்பது எவ்வாறு?" என்று வினவினான்.

பகவான்:—ஏ பார்த்த! க்ஷேத்திரக்ஞனை புருடன் விகாரமற்றவனென்றும், மாயாவடிவப் பிரகிருதியாகிய தேகமே சகல கருமங்களையும் செய்கின்றது என்றும் கண்ட விவேகியாகிய புருடனே உண்மையைக் கண்டவனாகும். ஆன்மா நிர்க்குணனாகலின், தேகம் எல்லாக் கருமங்களையும் செய்யினும், அவற்றோடு சம்பந்தித்திரான்.

(மேலே கூறியதை ஸ்ரீ பகவான் இப்போது திருட்டாந்த பூர்வமாய் அருளிச்செய்கின்றார்.)

ஆகாசம் நல்லன தீயனவாகிய எல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறம்பும் வியாபித்திருந்தாலும் அவற்றோடு சம்பந்தப்படாமலே தாக்கற்று நிற்பதுபோல், பரமான்மா சகல தேகங்களிலும் உள்ளும் புறம்பும் வியாபித்திருந்தாலும் அத்தேகங்களின் சுபாசுப கருமங்களோடு சம்பந்தியாமலே யிருப்பன்.

ஆதித்தன் தான் ஒருவனாகவே நின்று உலகிலுள்ள சகல வஸ்துக்களிலும் பொருந்தியிருக்கும் இருளை நீக்கிப் பிரகாசிக்குந் தன்மைபோல் க்ஷேத்திரக்ஞனை பரமான்மா ஒருவனே சரா அசரங்களாகிய எல்லாச் சரீரங்களிலும் வியாபித்து நின்று அவற்றைப் பிரகாசிப்பான்.

(சூரியன் பல பேதங்களாய் உள்ள சகல வஸ்துகளின் இருளை நீக்கிப் பிரகாசித்துக்கொண்டிருந்தாலும் அவ்வஸ்துக்களின் பேதத்தால் தான் பேதமடையான். அவற்றின் சுத்தம் அசுத்தங்களால் தான் எவ்வித விகாரமுமடையான். அதுபோலவே பரமான்மா சகல சரீரங்களிலும் வியாபகமாய்ப் பிரகாசித்துக்கொண் டிருந்தாலும் எவ்வித பேதமாவது அடையான் என்பதாம். இத்தகைய திருட்டாந்த தாட்டாந்தங்களில் விஷயத்தில் எவ்வளவு சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதுவரையில் மட்டுமே ஒத்திட்டுப் பார்த்துக்கொள்ளவேண்டும்.)

ஏ பார்த்த! தேகேந்திரியாதிகளனைத்திற்கும் அதீதமாய் நிற்கும் க்ஷேத்திரக்ஞனோடு உடம்பிற்குரிய நாமம், ஜன்மம், ஜரா மரணம் என்ற தருமங்களையும் இப்பூமியின்கண் வேறு பிரித்தறியா நிற்பவர் முத்தியை யடைந்தவராவர் (தொடரும்.)

பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.



சீடன்.

## நாலடியார் வசனம்.

(71-ம் பக்கத் தொடர்ச்சி)

### 7-ம் அதிகாரம் சினமின்மை.

(தம்மை மேன்மையாக) மதித்து நடப்பவர்களும் நடக்கட்டும், (மதியாமல்) கீழ்மைப்படுத்தி நடப்பவர்களும் நடக்கட்டும். (அதற்காக கோபிக்கலாகாது) (மிக்க இழிவாகிய) ஈயும் தன் காலால் மிதித்தேறித் தலைமேலிருக்கிறது. (அதற்காக அதனைக் கோபிப்பாருளரோ?) ஆகையால் அவ்வீயின் தன்மையை யறிந்தவர்கள் பகைத்தற்குக் காரணமான கோபமடையாதிருத்தல் நல்லது. (1)

அடிகளைப் பெயர்த்துவைக்க முடியாதபடி, மிகவும் நெருக்கடியான இழிவுவந்த காலத்திலும் (மனந்தளராமல்) எண்ணினவைகளை முடிக்கும் மனவுறுதியுடையவர்கள், கோபங்கண்ட விடத்தெல்லாம் தங்கள் அழியாச் சிறப்பினையுடைய உயிரை விட்டுவிடுவார்களோ? (விடமாட்டார்கள்.) (2)

ஒருவன் தன் நாவைக் காக்காமல் தன் வாயைத் திறந்து சொல்லும் கடுமையான வார்த்தைகள், இடைவிடாமல் அவனையே வருத்தும்; ஆதலால், பல நூல்களை ஒழியாமல் ஆராய்ச்சிசெய்து அதனால் நிறைந்த கல்வியறிவுடைப் பெரியோர் ஒருபோதும் பிறரைக் கோபித்து, கொடுமை நிறைந்த சொற்களை உருத்துச் சொல்லமாட்டார்கள். (3)

(தம்மோடு) சமானமாக வைத்தெண்ணத்தகாத கீழோர் (தம்மை) எதிர்த்து, குணமில்லாத (இழிவான) சொற்களைச் சொன்னால் (அதற்காக) மேலோர் மனம் புழுங்கி (அவர்களைக்) கோபிக்கமாட்டார். (ஆனால்) இழிந்தோன் பிறர் கூறின வசவுச் சொற்களை (அப்பொழுது என்ன சொன்னான்? இப்பொழுது என்ன சொன்னான்? என்று பலமுறையும்) ஆராய்ந்து (அடிக்கடி அவற்றையே மனத்தில்) நினைத்துக்கொண்டு ஊராரெல்லாம் கேட்கும்படி போய்ச் சொல்லித் துடித்து தூணில் முட்டிக்கொள்வான். (4)

(விஷய நுகர்ச்சிக்கேற்ற) இளமைப் பருவமுடையவன் ஐம்பொறிகளையும் (விஷயங்களிற் செல்லாதபடி) அடக்குதலே (சிறந்த) அடக்கமாகும். (மேன்மேலும்) விருத்தியாகும்படியான செல்வமில்லாதவனாகிய வறியவன் கொடுக்கும் கொடையே நற்பயனைத்தரும் கொடையாகும். எல்லாவற்றையும் அழித்துவிடக்கூடிய வெற்றியையும் வல்லமையையுமுடைய சுத்தவீரன் பொறுக்கின்ற பொறுமையே சரியான பொறுமையாகும். (5)

(சீறி படம் விரித்தெழும்பொழுது மந்திரக்காரன்) மந்திரித்திடும் திருநீற்றால் படத்தை யடக்கிக்கொள்ளும் பாம்மைப்போல, (பெரியோர்) தங்கள் தங்களுடைய குடிப் பிறப்பின் மேன்மையால் தடுக்கப்பட்டு, கல்

லெறிந்தாற் போலக் கீழோர் வாயிலிருந்துவரும் கடுஞ்சொற்களை, யாவரும் காணப் பொறுத்துக் கொண்டு போவார்கள். (6)

பகைவர்களாயிருந்து தம்மோடு மாறுபாடுகொண்டு எதிர்ப்பவர்களுடன் தாமும் எதிர்த்து நில்லாமல் தாழ்ந்து போவதை அறிவுடையோர் வல்லமையில்லாமை (பலஈனம்) என்று சொல்லமாட்டார்கள். அப்பகைவர் தம்மை எதிர்த்து, சகித்தற்கரிய துன்பங்களைச் செய்தாலும், தாம் திரும்பி அவர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலே நல்லது. (7)

கீழ் மக்களுக்குண்டாகும் கோபமானது எவ்வளவு காலங் கழிந்தாலும் நீங்காமல் வளர்ந்துகொண்டே யிருக்கும். சிறப்புடைய பெரியார் கோபமோ காய்ச்சுங் காலத்து நீரானது அடைந்த வெப்பத்தைப்போல, (காலம் செல்லச் செல்ல வெப்பம் தணிந்துகொண்டே போய்விடுவது போல) தனக்குத்தானே ஆறிவிடும். (8)

(ஒருவர்) தாம் உபகாரம் செய்ததை மறந்து, தமக்கு அபகாரத்தை மிகுதியாகச் செய்தாலும், (மேலும்) அவருக்கு உபகாரம் செய்வதே யல்லாமல், அவர்கள் செய்த குற்றத்திற்காகத் தீமையைச் செய்தலாகிய குணம் மேன்மை பொருந்திய குடியிற் பிறந்தவர்களுக்கு இல்லை. (9)

நாயானது கோபங்கொண்டு தம்மைக் கடிக்கப் பார்த்தும், பதிலுக்குத் தம் வாயால் அந்த நாயைக் கடித்தவர் இவ்வுலகில் ஒருவருமிலர். (அதுபோல) கீழானவர்கள் குணமில்லாமல் இழிவான சொற்களைச் சொல்லி வைதால், மேலோர் தாமும் திரும்பத் தங்கள் வாயால் அத்தகைய இழி சொற்களைச் சொல்வார்களோ? (சொல்லமாட்டார்கள்.)(10)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.

---

## மாதர் நீதி மஞ்சரி.

(9-ம் தொகுதி 421-ம் பக்கத் தொடர்ச்சி.)

முந்தின நாள் மொழிந்தவாறே, மனோன்மணி யம்மாளும் பெண்களிருவரும் தோட்டத்திற்கு வந்தார்கள். அப்பொழுது மரகதம் தன் தாயை நோக்கி 'அம்மா! தாங்கள் மாதர் குணங்களைப்பற்றிக் கூறுவதாகச் சொன்னீர்களல்லவா நேற்று, அவற்றை யிப்பொழுது எங்களுக்கு உரைக்கவேண்டும்' எனக் கேட்டனள். அதற்கு, மனோன்மணியம்மாள் "பிரியமக்களே! வாருங்கள்; இம் மேடையின்மேல் அமர்ந்து பேசுவோம்" என்றனள். அவ்வாறே யமர்ந்தபின் மரகதம்மாள் பின் வருமாறு கூறத் தொடங்கினள்:—

### மகடூக் குணம்.

" கண்மணிகளே! இவ் வுலகத்தில் குணமில்லாததாக ஒரு பொருளையேனும் காண்பதரிது. எல்லாப் பொருள்களும் தத்தமக்கேற்றபடி-மிகுதியாகவோ குறைவாகவோ-நன்மையாகவோ தீமையாகவோ-குணமுடையனவாகவே யிருக்கின்றன. இது உலக வியற்கை; ஈஸ்வர சிருஷ்டி

யின் மகிமை. மானிடன்மட்டுமே, கொள்ளத்தக்கனவும் தகாதனவுமாகிய பல குணங்களினிடையில் தன்னிஷ்டப்படி எடுக்கவும் விடுக்கவும், அதனால் நல்லவனாகவும் தீயவனாகவும், அதனால் நன்மை யடையவும் துன்மை யடையவும் ஈஸ்வர சிருஷ்டியில் பொதுவாக விடப்பட்டிருக்கிறான். ஒருவன் தன்னை உயர்த்திக் கொள்ளலாம்; தாழ்த்திக்கொள்ளலாம். பிறவியைப் போக்கிக்கொள்ளலாம்; நரகை ஆக்கிக்கொள்ளலாம். 'பெருமையும் சிறுமையும் தான்றர வரும்'; 'தனக்கு மருத்துவன் தானே'; 'தானே தனக்குப் பகைவனும் நட்டானும்.'

மனிதர்களுக்குள் செயற்கைப் பிரிவுகள் பலவும் இயற்கைப் பிரிவுகள் இரண்டும் உள்ளன. செயற்கை மனிதப்படைப்பு; இயற்கை தேவ சிருட்டி. பிராம்மணம் க்ஷத்திரிய முதலானவை செயற்கையிற்சேர்ந்தவை. ஆண் பெண்ணென்பன இயற்கை. (இப் பிரிவுகள் இலக்கணத்தில் பால்களெனப்படும்.) இவ் விருபாலார்க்கு மிருக்கவேண்டிய குணங்கள் பொதுக் குணங்கள், சிறப்புக் குணங்கள் என இருதிறப்படும். ஜீவகாருண்யம், சத்தியம், தருமம் முதலியன பொது. அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னு மிந்நான்கும் ஆடவர்க்கும், நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனு மிவை மகளிர்க்குமுரிய சிறப்புக் குணங்களாம். ஆடவர் குணம் 'ஆடூஉ'க் குணமென்றும், மகளிர்குணம் 'மகடூ உ'க் குணமென்றும் கற்றறிந்த புலவர் கழறுவர். (ஆடூ உ = ஆண், மகடூ உ = பெண்.) அவற்றுள் பெண்தன்மைக் குரியதான மகடூஉக் குணங்களைப் பற்றிச் சிறிது விளக்குகின்றேன்.

முதலாவது—நாணம். இது வெட்கம், கூச்சம் எனப் பொருள்படும். புருடர்களுக்கும் இஃது வேண்டுவதெனினும், அதற்கும் இதற்கும் மிக்க வேறு பாடுண்டு.

கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

"நன்மக்கள் நாணுவது இழிந்த கருமம் காரணமாக நாணுதல்; அஃதன்றி மனமொழி மெய்களின் ஒடுக்கத்தால் வருவனவோ வெனின், அவை அவரளவல்ல, அழகிய குலமகளிர் நாண்கள்." என்னும் திருக்குறள் உரையால் நாணத்தின் வேறு பாடு விளங்குவது காண்க. ஆகலின், இங்கு நாண் என்பது மனமொழி மெய்களின் ஒடுக்கத்தாலுண்டாவது. அது, பெரும்பாலும் மாதரிடத்து, அந்நிய புருஷர் விஷயமாக நிகழ்வதென்னலாம். தம்மைப் பர புருடர் கண்டவிடத்தும், தாமவரைக்காண நேர்ந்தபொழுதும், அவரெதிர் நில்லாது தலை குனிந்த வண்ணமாய் விலகிச் செல்வது நாண். தனியே வெளிக்கிளம்பாமையும், மிக்க அவசியமாகச் செல்ல நேருங்கால் துணையோடன்றிப் போகாமையும், தெருவாயிலில் நின்று கொண்டு அண்டை அயல் வீட்டு மாதரோடு சம்பாஷித்துக்கொண்டிராமையும், அன்னியர் வீடுகளுக்கு அடிக்கடி ஏகாதிருத்தலும், அவ்வாறு வீடு நுழையும் பெண்களுடன் கூடாமையும் நாண். அன்னிய ஆண் பாலரின் அழகு கல்வி செல்வம் புகழ் முதலாகிய சிறப்புக்களைக் குறித்துச் சிறிதும்

சிந்தியாமலும் பேசாமலுமிருத்தலும், பிறர் பேச்ச செவி கொடாதிருத்தலும் நாண். இந்நாண் என்னும் குணமே எல்லா நற்குணங்களையுமாக்கும். விலை மாதர்களே நாணமற்றவராவர்.

> * * * * முட்டவே
> கூசி நிலை நில்லாக் குலக் கொடியும் கூசிய
> வேசியும் கெட்டு விடும். * * * (ஔவையார்)

"முழுதும் நாணி அந்த நிலையில் நில்லாத குலமாதும், நாணிய வேசையும் கெட்டுப் போவார்கள்" என்பது ஆன்றோர் மொழி.

**இரண்டாவது—மடம்.** இது எல்லாமறிந்திருப்பினும் அறியாதார் போன்றிருத்தல். 'எனக்கு இது தெரியும், அது தெரியும், எல்லாம் தெரியும். உனக்கென்ன தெரியும், அவளுக்கொன்றும் தெரியாது' எனப் படாங்கு பேசி பறை யறையாமல் பெட்டிப் பாம்புபோல அடக்கமாய் இருக்குமிடந் தெரியாமல் இருத்தலே மடமையென்னப்படுவது.

**மூன்றாவது—அச்சம்.** இது அஞ்சத்தக்கவைகளுக் கஞ்சுதல். முற்காலத்தில் நம் நாட்டுப் பெண்ணரசிகளிற் பலர், மிக்க பராக்கிரமமுடையவர்களாயிருந்தன ரென்பது சரித்திரங்கள் வாயிலாக அறியக் கிடப்பதோருண்மை யாகலின், வீர தைரியங்களும் அன்னாருக் கத்தியாவசியக மானவையே யென்பது பெறப்படுகின்றது. எனினும், அவை தங்களைத் தாங்களே கற்பினுக்குக் கேடுண்டாகாதவாறு காத்துக்கொள்ள வேண்டிய காலங்களில் கையாளப்படல் வேண்டும். மற்றப்படி எப்போதும் யாண்டும அச்சத்தை அகற்றலாகாது. நினைத்த வளவில் நீறாக்கும் தகைமையை பெற்றிருந்தும் சீதாபிராட்டியார் இலங்கையில் சிறைபடத் துன்புற்றிருந்தது நாணம் மடமை அச்சங்களினாலன்றோ! பலர் கூடியிருக்கும் கூட்டத்திற் சென்றால் யாது நேரிடுமோவெனப் பயந்து நிற்பது அச்சம். இல்லம் விட்டேகின் இடுக்கண் என்ன விளையுமோ என்று அச்சமடைதல் வேண்டும். அச்சம் பெண்களின் பிரகிருதியாகலின், அதற்கு மாறாக 'என் புருஷர்களைப்போல் நாமும் இருத்தலாகாது? அஞ்சுதலேன்?' என்று அவ்வாறே நடக்க முயல்வோர் நற்பெண்டிரெனப் பெரியோரால் பேசப்படார். அது மாதரின் ஒழுக்கத்திற்கும் இயற்கைக் குணத்திற்கும் மாறுபட்டது. மாதர் ஆண் தன்மையை யடையின் உலக வாழ்க்கை மாறுபட்டு, இல்லற ஒழுக்கம் சீர்கெட்டு அழியும். இனி, நான்காவதாகிய பயிர்ப்பென்பது, அன்னிய ஆடவரின் ஆடையே யெனினும் தம்மேற் படின் உடல் அருவருத்தலாகும். தம்முடலைத் தொடற்குரியார் மணாளரே யன்றிப் பிறர்-பெற்ற தந்தையே யெனினும் உடன் பிறந்தாரே யெனினும், உரியராகார். ஆகவே தெருக்களிலும் ஆலயங்களிலும் திருவிழாக்களிலும் மங்கையர்கள் தங்களை யொத்த மகளிரோடு ஒரு புறமாக ஒதுங்கிச் செல்லல்வேண்டும். சங்கையின்றி யாடவர்மீது அங்கம் படும்படி நடத்தலாகாது. (விசேஷ காலங்களில் வேண்டுமென்றே பெண்டு

கள்மேல் விழுந்து இடித்துக்கொண்டு போகும் இடக்கர் பலர் எழுந்தருளுவதால், ஆலயங்கள் திருவிழாக்களுக்குப் போகாதிருத்தலே நலமெனத் தோன்றுகிறது. இன்றேல் ஆலயங்களுக்குச் சனக்கூட்டமில்லாத காலத்தில் செல்வதும், திருவிழாக்களை யெட்டவிருந்து நோக்குதலும் தகுதியாகும்.)

பெண்மணிகளே! இந் நான்கு குணங்களையும் நங்கையர் நன்கு பெற்றிருத்தல் வேண்டும். புகழேந்திப் புலவர், நளவெண்பாவில் 'தமயந்தியின் பெண் தன்மையாகிய அரசை, இந்நான்கு குணங்களையே யானை குதிரை தேர் காலாள் என்னும் அரசர்க்குரிய நால்வகைச் சேனைகளாகக் கொண்டு அரசாண்டாள்' என்று 'நாற்குணமும் நாற்படையா... ஆளுமே பெண்மையரசு' என்னும் செய்யுளில் வெகு அழகாகப் பாடியுள்ளார். இதனால் பெண் தன்மையை யழியாமற் காப்பாற்ற இந் நான்கையும் படையாகக் கொள்ள வேண்டும் என்று உணரவேண்டும். அங்ஙனம் கொள்வோர் இம்மை மறுமைகளில் புகழும் இன்பமுமடைவர். இன்றேல் பழியும் பாவமும் பற்றி வருத்தும்.''

நான் கற்று வல்லவளல்லவாகலின் இயன்ற வரைக்கும் இயம்பினேன். அவற்றை நீங்கள் மனத்திற்கொண்டு மாண்புடன் ஒழுகுவீராக.

மரகதம்:—அம்மா! எம்மை யொத்த பாக்கிய சாலிகள் எவருமிரார். தங்கள் நற்போதனையால் நல்லுணர்வு பெற்றோம். மரணபரியந்தம் இந் நீதிகளைக் கடைப்பிடித்து வாழ்வோம்.

மங்கை:—அம்மா! பகற்பொழுது கழிய இன்னும் காலமிருக்கிறது. அதற்குள், என் மனத்துத் தோன்றும் மற்றோ ரையத்தை மாற்றும்படி மன்றாடுகிறேன்.

மனோன்மணி:—என் கட்டிக் கரும்பே! அது என்ன? சந்தோஷமாகக் கேள்.

மரகதம்:—கன்னிகைகள் தங்கள் தாய் தந்தையரால் தெரிந்தெடுக்கப்பட்ட வரை அவர்கள் பிரியப்படி மணப்பது நல்லதா? அல்லது தற்காலத்தில் சிலர் சொல்கிறபடி, தாங்களே தக்கவர்களைக் கண்டறிந்து மணப்பது நல்லதா?

மனோன்மணி:—நல்ல கேள்வி மரகதம்! அது அறியத்தக்கதே, கூறுகிறேன்.

மாதர் மணம்.

அதைக் குறித்துப் பேசுமுன் விவாகமென்றாலென்ன? எதற்காக விவாகம் செய்துகொள்வது? என்பவைகளைப்பற்றி அறிதல்வேண்டும். எதற்காகவென்று உங்களைக் கேட்கிறேன். நீங்கள் யாது கூறுவீர்கள்? (பெண்களிருவரும் நாணத்தால் தலை குனிகின்றனர்.) நல்லது. நானே கூறுகிறேன். (தொடரும்.)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
சித்தூர்.



# அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(78-ம் பக்கத் தொடர்ச்சி.)

லாயர்:—நீ யிறந்துபோனதாய்க் கேள்விப்பட்டேன். அதற்கு அத்தாட்சியாய் நீ அன்றுமுதல் வேலைக்கு வரவில்லை.

ஆனந்:—இது எனக்கு விளங்கவில்லை. நான் இறந்துபோனதாய்த் தாங்கள் எவ்வாறு கேள்விப்பட்டீர்?

லாயர்:—நீ இறந்தது இம்மாதிரி யென்று கேள்விப்படவில்லை.

ஆனந்:—சரி. எப்படியாயினும் என் மரணம் தங்களுக்கு விசனத்தையுண்டாக்கவில்லை யென்று நன்றாய்த் தெரிகிறது. ஆகையால் சந்தோஷத்தையேனும் உண்டாக்கி யிருக்குமோ?

லாயர்:—ஏன்? உன் மரணம் எனக்கேன் சந்தோஷத்தை யளிக்க வேண்டும்?

ஆனந்:—ஏனா? உன் அபாயகரமான இரகசியங்களில் அனேகம் எனக்குத் தெரியுமல்லவா?

லாயர்:—அடே! உன் வாயை மூடிக்கொண்டிரு. நீ முன்னமே இரண்டொரு முறை என்னைப் பயமுறுத்திப் பார்த்திருக்கிறாய், மறுபடி யப்படிச் செய்தாயோ தட்சணம் சவமாய் விடுவாய்.

ஆனந்:—நான் உனக்குப் பயந்த காலம் போய்விட்டது. நான் எப்படி இறந்துபோனேனென்று நீ கேள்விப்படவில்லை யென்கிறாயே. இது அடியோடு பொய் யென்று எனக்குத் தெரியும்.

லாயர்:—"அடே அச்சுதா? நீ மிக்க ஜாக்கிரதையாயிரு. என்னை மிரட்ட முயன்றால் பெரிய ஆபத்தில் சிக்கிக்கொள்வாய்" என்றான்.

தன்னிடம் பனிரண்டு ஆண்டுகள் குமஸ்தாவாயிருந்த அச்சுதனே யிவன் என்று லாயர் பூரணமாக நம்பிக்கொண்டான்.

ஆனந்:—"இப்போது நான் உனக்குச் சற்றேனும் பயப்படவில்லை யென்று உறுதியாய்க் கூறுகிறேன். இதுகாறும் மூடத்தனத்தால் நான் உன் அடிமைபோல் நடந்து வந்தேன். இனி நீ என் அடிமை யென்று எண்ணிக்கொள்" என்றான்.

இதைக்கேட்ட லாயர் மிக்க கோபமடைந்து "அடே நாயே! நீயா யென்னைப் பயமுறுத்துகிறாய்?" என்று ஆத்திரத்தோடு மடியில் கையை வைத்து ஏதோ ஆயுதத்தை யெடுக்கப்போனான். அதற்குள் ஆனந்தவிங் ஆறு குண்டுகள் சுடத்தக்க தன் கைத்துப்பாக்கியை மடியிலிருந்து சட்டென்றெடுத்து லாயரின் மார்பிற்கு நேராய் நீட்டிக்கொண்டு,

"இதோ பார், இம்மாதிரி யெல்லாம் என்னைப் பயப்படுத்தக் கனவு காணாதே. நான் பழைய அச்சுதனல்ல. சாக்கிரதையாயிரு?" என்றான்.

லாயர் உடனே முகம் வெளுத்துத் திகிலடைந்து நடுக்கங்கொண்டு, "அடே கடைசியில் நீ எனக்கே விரோதியாகவா திரும்பிவிட்டாய்?" என்றான்.

ஆனந்:—ஆம். நீ யமர்த்திய கொலை பாதகர் என்னைக் கொல்லத்தவறி விட்டார்கள்.

லாயர்:—அப்படியானால் சவசோதனைக் கிடங்கில் இறந்து கிடப்பவன் யார்?

ஆனந்:—"அவன் யாரென்று உன் கூட்டாளியாகிய கறுப்பண்ணனைக் கேள்" என்றான்.

அதன் பிறகு லாயர் தன் கோபமனைத்து மடக்கிக்கொண்டு, "அச்சுதா! நாம் இம்மாதிரி வாதாடுவதில் பயனில்லை. உனக்கு என்ன வேண்டுமென்பது எனக்குத் தெரியும். நாளைக்கு வா. நான் ஒழிவாய் ஏற்பாடு செய்து விடுகிறேன்" என்றான்.

ஆனந்:—நாளை எந்நேரத்திற்கு எங்கே வருவது?

லாயர்:—"இரவு ஒன்பது மணிக்கு என் ஆபீஸ் அறைக்கு வா!" என்றான்.

ஆனந்தஸிங் "சரியாய் ஒன்பது மணிக்கு வருவேன்" என்று கூறி விட்டுப் பின்னுக்கே சென்று வாசற்படியைக் கடந்து கதவை மூடிக் கொண்டு சென்றான். ஏனெனில் ஒரு விநாடி தன் முதுகை லாயரின் பக்கமாய்த் திருப்பி யிருப்பானேல் தட்சணம் அவன் பிராணன் போயிருக்கும். லாயர் அத்தகைய படுமோசக் கொலை பாதகன்.

அந்த லாயருடைய விஷயங்கள் யாவும் பவானி ஆனந்தஸிங்குக்கு விபரமாய்க் கூறி யிருக்கிறாள்.

ஆனந்தஸிங் தன் வாசஸ்தலத்திற்குச் செல்லும்போது "அச்சுதனைக் கொல்லச் செய்த ஏற்பாட்டில் ஏதோ தவறு நடந்திருக்கிறதென்று லாயர் சந்தேகப்படுகிறான். அதனால் கறுப்பண்ணனையும் மலையாளியையும் விசாரிக்க எண்ணங்கொண் டிருக்கிறான்" என்று தனக்குள் சிந்தித்துக் கொண்டே சென்றான்.

## 6-வது அத்தியாயம்.

மேல்கண்ட சம்பவங்கள் நடந்த அதே யிரவு கறுப்பண்ணனும் மலையாளியும் கறுப்பண்ணன் வசிக்கும் அம்பாலிகையின் மாளிகையிலுள்ள புத்தக சாலையில் உட்கார்ந்து சம்பாஷித்துக்கொண் டிருக்கிறார்கள்.

மலையாளி நல்ல அழகான முகமும் கட்டுவிட்ட பலம் பொருந்திய தேகமுமுடையவன். அவன் உருவத்தைக் காணும் எவரும் அவன் நய வஞ்சகம், மோசம், கொடுமை முதலிய தீய குணங்கள் நிறைந்த இரக்கமற்ற கொலை பாதகனென்று சற்றேனும் கருதார்.

இருவரும் சற்றுநேரம் மௌனமாயிருந்த பின், மலையாளி:—"நான் சொல்வதாவது, நாம் சற்றேனும் ஜெயமடையவேயில்லை. அதற்கு மாறாய் முழுமையும் தோல்வியே சம்பவிக்குமென்றே நம்புகிறேன். நீ செய்துவிட்ட குழப்பமே யதற்குக் காரணம்" என்றான்.

கறுப்பண்ணன்:—நீ கூறிய ஏற்பாடு கூட ஜெயமடைந்திராது.

மலையாளி:—என் ஏற்பாடு ஜெயமடைந்தே யிருக்கும். அந்த அம்பாலிகைப் பெண்ணை யொரே தூக்கமாய்த் தூங்க வைத்துவிட்டிருக்க வேண்டும். அதோடு மனோகரனைத் தொலைத்துவிட்டால் பிறகு நமக்கு விரோதமாய் ஒன்றைக் கூறுகிறவர்களே யில்லை.

கறுப்:—என் ஏற்பாடு பூரண ஜெயமே அடைந்திருக்கும். ஆனால் ஒரே யொரு தப்பிதம் நேர்ந்துவிட்டது. (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

**இமயமலையின் அதிசயம்:**—உலகிலுள்ள எல்லா மலைகளிலும் உயரமானது இமயமலை யென்பது யாவருமறிந்த விஷயம். அதன் சிகரங்களில் மிக்க உயரமானது எவரஸ்ட் மலை. அதன் உச்சியைக் காணவேண்டி இரண்டொரு முறை சில ஆங்கில நிபுணர்கள் முயன்றும் முடியாமற் போயிற்று. சமீபகாலத்திலும் சிலர் முயன்றார்கள். அவர்களால் ஒரு அதிசயம் கண்டு பிடிக்கப்பட்டது. அதாவது அங்கு எட்டடி உயரமான மனிதர்கள் பனி மலையில் வாசம் செய்கிறார்களாம். சமீபத்தில் மலையேறியவர்கள் அம் மனிதர்களை நேரில் காணாவிடினும் நேரில் கண்ட திபெட் வாசிகள் கூறக் கேட்டார்கள். அந்த மனிதர்கள் திபெட் வாசிகள் மலை யேறியபோது அவர்கள் கூடாரங்களிலுள்ள உணவுப் பொருள்களைக் கொள்ளை யடித்துக்கொண்டு போய்விட்டார்களாம். அம் மனிதர்களுக்கு ஒரு அரசன் உண்டென்றும் அவன் எவரஸ்ட் மலைச்சிகரத்தில் வசிப்பதாகவும் அத்திபெட் வாசிகள் கூறுகிறார்களாம். இமயமலையில் பல அபூர்வப் பிராணிகளும் பிரம்மாண்டமான வானரங்களும் இருப்பதாக முன்னம் அறிவிக்கப்பட்டிருந்தது.

## கல்கத்தாவிலுள்ள அச்சாபீசுகளும் பத்திரிகைகளும்.

போலீஸார் கொடுத்திருக்கும் ரிப்போர்ட்டு பிரகாரம் கல்கத்தாவில் 31 தினப்பதிப்பு பத்திரிகைகளும், 3 வார இருமுறை பதிப்பு பத்திரிகைகளும், 70 வாரப்பத்திரிகைகளும், 15 மாத இருமுறைப்பத்திரிகைகளும் 177 மாதந்தரசஞ்சிகைகளும் 27 மாதமும்முறை பத்திரிகைகளும், 3 வருஷ சந்தா சஞ்சிகைகளும் இதன் காரணமாக சுற்றுபக்கங்களில் 600 அச்சாபீசுகளுமிருக்கிறதாகத் தெரிகிறது.

சிரங்குக்கு காக்காவலிக் கொட்டையை நன்றாக உலர்த்திப் பொடி பண்ணி அதனைத் தேங்கா யெண்ணெயோடு கலந்து நெருப்பில் சூடேற்றி அந்த எண்ணெயை எடுத்து வைத்துக்கொண்டு, சிரங்குள்ளவர்கள் நாள் தோறும் குளித்தவுடனே சிரங்குப் புண்களில் தடவிக்கொண்டு வந்தால் எவ்வித சிரங்கும் நாலைந்து நாளைக்குள் தீர்ந்து விடுமாம்.

## திருவாங்கூரில் ராட்டினப் பயிற்சி.

திருவாங்கூர்ச் சட்டசபைத் தீர்மானத்தின் பயனாக சமஸ்தானப் பள்ளிக்கூடங்களில் ராட்டினப் பயிற்சி ஏற்படுத்துவதற்காகத் திருவாங்கூர்க் கல்வியிலாகாத் தலைவர் ஒரு திட்டம் தயாரித்திருக்கிறார். அரசாங்கச் செலவில் ஒருவரைக் குண்டூர் அல்லது பெஜவாடாவுக்கு அனுப்பி, நூல் நூற்றலைப் பற்றிய சகல முறைகளையும் அறிந்து வரச்செய்து, அவரைக் கொண்டு வருஷந்தோறும் இருபத்தைந்து உபாத்தியாயர்களுக்கு நூல் நூற்கும் பயிற்சி யளித்துப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப வேண்டுமென்று அவர் சிபார்சு செய்திருக்கிறார். இதற்காக அடுத்த வருஷம் வரவு செலவு திட்டத்தில் ஐயாயிரம் ரூபாய் ஒதுக்கி வைக்கப்படுமாம்.

**இராஜாங்க உதவி :**—பிரான்ஸ் தேசத்தில் ஒரு குடும்பத்தில் மூன்றுக்கு மேலுள்ள ஒவ்வொரு குழந்தைக்காகவும் பதினாறு வயது வரை பாதுகாப்புக்காகச் சுமார் அறுபது ரூபாய் கொடுக்க வேண்டுமென்று சென்ற வருஷத்தில் சட்டம் ஏற்பட்டிருக்கிறது. இந்த நாட்டில் எத்தனை பிள்ளைகள் இருந்தாலும் எழைகளா யிருந்தால் காற்றைக் குடித்துத்தான் உயிர் வாழவேண்டும். (லோகோபகாரி.)

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## ரக்தாக்ஷிஞு ஐப்பசிமீ—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847, பசலி 1334—கொல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343, இங்கிலீஷ் 1924ஞு அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வெ | சது4-20 | ரோ27-10 | ம27-10சி | |
| 2 | 18 | சனி | பஞ்11-20 | மிரு34-38 | சித்60 | மாடுகொள்ள |
| 8 | 19 | ஞா | சஷ்16-48 | திரு42-18 | சித்60 | மந்திரம் ஜபிக்க |
| 4 | 20 | திங் | சப்23-0 | புன49-25 | அ49-25சி | சர்வமுகூர்த்தம் |
| 5 | 21 | செவ் | அ28-20 | பூச55-33 | சித்60 | அசோகாஷ்டமி |
| 6 | 22 | புத | நவ32-20 | ஆயி60 | சித்60 | கரிநாள் |
| 7 | 23 | வியா | தச34-28 | ஆயி0-10 | சித்0-10அ | மந்திரபிரயோகம் செய்ய |
| 8 | 24 | வெ | ஏகா34-30 | மக2-48 | மர2-48சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 9 | 25 | சனி | து 32-28 | பூரம்3-30 | சி3-30மர | கோவத்ஸ துவாதசி |
| 10 | 26 | ஞா | திர28-28 | உத்2-3 அஸ்58-58 | அமி60 | இரவில் நரகசதுர்தசீ ஸ்நானம் |
| 11 | 27 | திங் | ச●22-45 | சித்54-20 | பி54-20அ | அமாவாசை, தீபாவளி, கேதாரகௌரி விரதம் |
| 12 | 28 | செ | அ15-55 | சுவா48-43 | சி48-43ம | பலிபிரதிபாத, பலிபூஜா |
| 18 | 29 | புத | பிர8-5 துதி59-58 | விசா42-30 | சித்60 | சந்திரதரிசனம், கார்த்தீகசுத்தம், அவமாகம் |
| 14 | 30 | வியா | திரி51-48 | அனு33-40 | சி33-40பி | சர்வமுகூர்த்தம் |
| 15 | 31 | வெ | சது44-3 | கேட்30-8 | மர30-8அ | நாகசதுர்த்தி விரதம் |
| 16 | 1924ஞு நவம்பர்மீ 1 | சனி | பஞ்36-50 | மூல24-48 | சித்60 | விதைவிதைக்க |
| 17 | 2 | ஞா | சஷ்31-3 | பூரா20-25 | சி20-25அ | |
| 18 | 3 | திங் | சப்26-15 | உத்17-5 | ம17-5சித் | |
| 19 | 4 | செ | அ22-43 | திரு15-5 | சித்60 | |
| 20 | 5 | புத | நவ20-25 | அவி14-25 | பி14-25சி | |
| 21 | 6 | வியா | தச19-28 | சத14-48 | ம14-48சி | |
| 22 | 7 | வெ | ஏ19-38 | பூர15-58 | சித்60 | |
| 28 | 8 | சனி | து20-40 | உத்18-53 | சி18-53ம | |
| 24 | 9 | ஞா | திர22-45 | ரேவ22-13 | அ22-13சி | |
| 25 | 10 | திங் | ச○25-45 | அசு-26-45 | சித்60 | |
| 26 | 11 | செவ் | பவு29-38 | பர·※·31-53 | சித்60 | |
| 27 | 12 | புத | பிர34-25 | கிரு-38-0 | அ38-0சித் | காாதநீயபகுளம, கிருத்திகை [தியா |
| 28 | 13 | வியா | துதி40-3 | ரோக44-45 | மர60 | கார்த்திக சாதுர்மாச து |
| 29 | 14 | வெ | திரி46-20 | மிரு52-13 | சித்60 | சீமந்தம், காதுகுத்த, கிரகபிரவேசம் |
| 30 | 15 | சனி | சது52-58 | திரு59-55 | சித்60 | விருச்சிகரவி 16-18 |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ / கே | 2உ கன்-சுக் 4 ,, துலா-பு 22 ,, விரு-புத 30 , தனு-கு | | ராகு / சுக் |
| | குரு | சூரி சனி | புத |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.